வும் அமைந்துள்ளது. நடை நன்றாகவிருக்கிறது. இயற்றியவர் இன்னா ரெனத் தெரியவில்லை. இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது.

---

## (*b*) எதிராசரந்தாதி.

## ETIRĀJARANDĀDI.

Foll. 17*a*—18*a*. Fol. 19 is blank.

Complete.

A eulogy in ten stanzas on Yatirāja or Rāmānuja, the leading exponent of the Viśiṣṭādvaita - Vēdānta : by Aḻagiyamaṇavāḷadāsar or Piḷḷaipperumāḷayyaṅgār.

**Beginning :**

எதி[ரு](ரா)சரந்தாதி.

பூமான்பிறந்துசிறந் ததுவேலை புவிபடைத்த
கோமான்பிறந்து சிறந்தது[னா](நா)ன்மறை கூடற்சங்க
[னா](நா)மான்பிறந்து சிறந்தது பண்டெதிராச னென்னுஞ்
சீமான்பிறந்து சரணாகதியுஞ் சிறந்ததுவே. (க)

*      *      *      *
*      *      *      *

பின்னே [து](தொ)டரும் பிறவிப்பெருப்பிணிபோக்கும் வண்ண
மின்னேயிதற்கு மருந்தறிந்தே னிந்தமேதினியிற்
றன்னேரொருவரொவ்வா[யெ](வெ)திராசன் சரணமென்று
சொன்னே னறிந்திலையேமனமே யிந்தத்துக்கம் விட்டே. (உ)

**End :**

வையகத்தே தன்னை வள்ளலென் றேத்திலும் வாய்திறவாக்
கையகத்தேநின்று கண்குளிர்வீர் கருணாகரனை
மெய்யகத்தே வைத்தபூதூர் முனிதன் விரைமலர்த்தாள்
பொய்யகத்தேநிற்கிலு மகலாள் மணப்பூமகளே. (௯)

சந்தார்புயத் தெங்களாழ்வார் தமக்குந்த தியருக்கு
மந்தாதிபத்து மணவாளதாத னல[த்தி](ற்றி)யதால்
நந்தாதகுற்ற முண்டாகாதவர்க்கொரு நாய்கங்கைநீர்
தந்தாபந்தீ ரக்குடித்தாலுந் தீர்த்தத்தின் றாழ்வில்லையே. (௰)

**Colophon :**

பிள்ளைப் பெருமாளையங்கா ரருளிச் செய்தது.

(த-பு.)—

இப்பதிகம் விசிஷ்டாத்வைத சித்தாந்தப் பிரவர்த்தகராகிய எதிராசரது தோத்திர ரூபமானது. திருவரங்கக் கலம்பகம் முதலிய அஷ்டப்ரபந்தங் களையுமியற்றிய திவ்விய கவி அழகியமணவாள தாசரென்னும் பிள்ளைப் பெருமாளையங்கார் இயற்றியதென்று இதன் 10-வது பாட்டில் "அந்தாதி பத்து மணவாள தாதனலற்றியதால்" என்பதால் தெரிகின்றது. செய்யுள் நடை நன்றாக இருக்கிறது. இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது.

(c) திருவரங்கத்தந்தாதியுரை.
TIRUVARAṄGATTANDĀDIYURAI.

Foll. 20a—46b.

Complete.

Same commentary as that described under No. 256 of the D.C.T. MSS., Vol. I, wherein see for end.

**Beginning:**

மணவாளரவிந்தை மார்நோக்கவிம்மை மறுமையின்மா
மணவாளர்தம் பதம்லாய்த்திடுங்கோ யிலில்வந்தவந்த
மணவாளர்பொற்றிருப் பாதாம்புயங்கட்குமாலையென
மணவாளர்சூடும் யமகவந்தாதியை வாசிமினே.

திருஞானமுத்திரை துணை.

முதற் பாட்டு.

திருவரங்காவென்பது, பெரியபிராட்டியார் உள்ளுமனையாக நீங்காத மார்பை யுடையானே, பிரமதேவன் சேவிக்கவும், யாழ்த்தேவர் அவ்விடத்து விசுவசித்து இனிய சங்கீதம் பாடவும், சிறந்த கண்ணுறங்கா நின்ற சிரங்கத்தையுடையவனே, உன்னுடைய பூர்வ தாசனை எனக்குக் கிருபை பண்ண வெழுந்திருப்பாயாக. பெருமைக் காடையை விரும்பினேன்; உன்னிடத்திலே கைங்கர்யம் பண்ணுவதற்கென்றவாறு. திருவரங்கா உனக்குத் தொண்டு செய்வதற்கு வரங் காதலித்தேன், உன் பழவடியேற்கு அருள் செய்ய எழுந்திருவெனக் கூட்டுக. சிவனயன் சேவிக்கவும் என்க என்னும் நாம் வருவிக்கவும். கொள்வார்க்குக் கொடுப்பார் கொடுத்தல் இருந்து கொடுத்தல் வெகுமானமாகையால் எழுந்திரு என்றாரெனக் கூறுக.

ஓராதெழுதினே ஞயினு மொண்பொருளை
யாராய்ந்துகொள்வ தறிவுடையோர்—சீராய்ந்து
குற்றங்களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

**Colophon:**

இது திருவாய்மொழிப் பிள்ளை திருமாளிகை ஸ்வாமி பெரிய திருவடிப் பிள்ளை ஊாஸன் திருமலாசாரியன் எடு.

(கு-பு)—

இந்நூல் டிஸ்கிரிப்டிவ் காட்லாக்கின் 256-வது நம்பர் பிரதியில் வந்துள்ளதே. அதில் 54 வது செய்யுள் தொடங்கியிருப்பதால் நூலின் முதற் செய்யுளும் உரையும் இங்கு எழுதப்பட்டன. இந்தப் பிரதியில் இந்நூல் முற்றுமிருக்கிறது.

---

## R. No. 423.

Palm-leaf. 14 × 1½ inches. Foll. 21. Lines, 11 in a page. Tamil. Fair.

Presented in 1919-20 by M.R.Ry. A. Alagappa Ayyaṅgār Avargal, Vaḍakkurathavīdhi, Alwartirunagari.

(*a*) பராங்குசநாடகம்.

PARĀṄKUŚANĀṬAKAM.

Foll. 1*a*—20*b*.
Complete.

A drama embodying the birth of Nammaḻvār and his greatness as well as the greatness of the four works written by him, viz., the Tiruvāymoḻi, the Tiruviruttam, Tiruvāśiriyam, Tiruvantādi : by Śēṣakavi, a disciple of Kandāḍai Aṇṇan of Srirangam.

**Beginning:**

ஹரி: ஓம். ஸ்வஸ்தி.

ஸ்ரீபராங்குச சரிதம். ஆழ்வார் நாடகம்.

பருதிநிகரு[ை]தயமெனப் பார்புகழுந் திருப்புளிக்கீழ்
ப்பரிவாய்க்காரி
யொருபராங்குசசரிதை தண்டமிழால னுதினமும்
பாடியாடத்

திருவளருங்குருகைமால் சேவடியை நினைந்து
தொழுஞ் சேனைநாதர்
வருநாதமுனிகருடன் மதுரகவி மலரடிகள்
காப்பதாமே.

முனிவனுமந்த மொழி தவறாமல்
மனமகிழ்ந்துரைக்க வந்து நம்மாழ்வார்
மாதவர் போற்றும் மாமறைத் தமிழை
நாதமா முனிக்கே நாலாயிர
முரைத் துலகோற்குரைத் திடுமென்னத்

திருத்தமாய் முனிவன் செப்பவிப்புவியோ
ரனுதினமுரைக்க வனுசந்தானமும்
மனமகிழ் பொற்றூண் மண்டபந்தனிலே
சேடப்புளியுந் திருமஞ்சனமும்

பாடுந்தமிழ்ப்பிரபந்தக் கோட்டிகளும்
தத்துவமு ரைக்கும் முத்திரைக்கையன்
எத்திசை புகழ நித்தியோத் ஸவமும்
உளங்களிகூர விளங்கனு தினமும்
நாகரிகமுகுந்தன் நம்மாழ்வா ராய்த்

திருவவதாரஞ் செய்திடுஞ் சரிதை
நாடகமாக நவின்றிடும் படிக்கே
பாடினேன் பெரியோர் பதத்துணை தொழுதே.

*            *            *            *

*            *            *            *

புன்னாகவராளி.

இங்குல கெங்கும் பொற்
பங்கயப்பதம் போற்றும்
நங்கையார் தோன்றினு[ள](ர).
குங்குமத்திலகமும் தங்கரேகை போற்றீட்டி(ப்)
பைங்கிளி மொழி[த்]திகழ் பெண்கள் கிரீடி.-இங்கு.

விருத்தம்.

கருமுகிலா திநாதர் கழலிணை தன்னைப் போ[த்தி](ற்றி)ப்
பரிவுடன் குருகைவாழும் பராங்குச நாடகத்தை
யுரைசெயத் தமிழ்[நா](ன) லிவ்வுலகினிற் பாடியாடப்
பரகதிபெற்ற வாழ்வார் பதி(ன்)மருங்காப்பதாமே.

காசினிபுகழரங்கக் கந்தாடையண்ணனுக்கே
தாசனென்றுலரக்குஞ் சேஷகவி ஞன்தண்டமிழாற்செய்து
வாசமாய்க்குருகைதன்னில் வாழ்பராங்குச சரித்திரம்
பேசநற் பெரியோரென் சொற்பிழைபொறுத்தருளுவீரே.

தொடையம்.

ஜயஸத்ஜநகாரண ! ஜயலக்ஷ்மீ ரமண !
ஜயஸம்ஸாரவாரண ! ஜயவக்ஷோஹாரண ! ஜயஜய.
ஜயாச்ர்யகீர்த்தே ! ஜயஜயஸ்ரீசேஷநிகேதந !
ஜயகுணநிலயகேதந ! ஜயகாஞ்சீகேதந ! ஜயஜய.

தெள்ளுமறைத் தமிழ்விசித்ர ! திருவிசாக நட்சத்ர !
வள்ளற் காரியருள்புத்ர ! மாதவ சரித்ர ! ஜயஜய.

மங்களம் மகிழ்மாறர்க்கு மங்களம்
நங்கைசுதாகரனுக்கு மங்களம். மங்களம்.

*          *          *          *          *

*          *          *          *          *

ஆதிநா[ல்]தரைப்பணிந்தே யரவத்திருப்புளிக்கீழ்
மாதவம்புரியுநம் மாழ்வாராய் வந்தவர்க்கு
மங்களம், மகிழ்மாறர்க்கு மங்களம்.

அகவல்.

அருள்மிக நிரம்புமகத்தியன் செந்தமிழ்ப்
பொருளுயர்ந் திலங்கும் பொதியமாமலையான்
வருகயல்தூவும் பொருநையாறுடையான்
பொழிமலர்த்தேன் சொரி வழுதிநன்னாடன்
திருவளர் கின்றதென் குருகைமாநகரான்

*          *          *          *          *

*          *          *          *          *

கொடையினிற் கன்னன் கொ[த்த](ற்ற)வன்காரி
தந்தபராங்குசன் சரித்திரந் தன்னைச்

செந்தமிழாலே செப்பு மாகமங்கள்

* * * *

காரிநங்கையைக் கலியாணஞ் செய்து
பேரினிவிளங்கப் பிள்ளை யிறைசையால்
ஆதிநாத[ரை](ர்) பொன் னடியிணை போற்றத்
தீதிலா திருக்குந் திருக்குறுங் குடிமா
நாதனே புத்திரன் நல்குவனென்ன
மாதுடனேகி மாதவம் புரியவப்
போது நம்பியு மாகாசவாணியாய்
இப்பிறப்[பிறப்]பினிற் சே யில்லை யென்றுரைக்க
வரசனுந்தான் கேட் டா[த்து](ற்று) மப்பொழுது
நாகரிநம்பி நாமே யுமக்குப்
பிள்ளையுமாவோம் பெருமைசேர் மன்று
வுள்ளமுந்தான் மகிழ்ந் துவந்து செல்கென்னச்

* * * *

கார்முகில்நம்பி கருணையால் நங்கை
கர்ப்பமுமாகிக் காதல னுதிக்க

* * * *

அன்னைமுலைப்பா லருந்திலே மைந்த
னென்னவோ வென்றே யிருக்க வேழாநாள்
காப்பிடப்பிள்ளைமா ராப்புட னக்குக்,
குத்தவுங்காது குறத்தி மெய்க்குறியு
மு[த்த](ற்ற)தைச்சொல்ல வுகந்தாதி நாதன்
சன்னிதியதிற் சேப் தனைக் கொணர்ந்திடவும்
பன்னகப் புளிக்கீழ்ப் பராங்குசனிருக்க
வயித்தியர் வந்து சயித்தியவுட்டணஞ்
சொல்லவுமே நோ யில்லையென் றுரைக்கச்
சாத்திரக்காரர் பார்த்துச் சாதகமும்
திருப்புளியின் கீ ழிருப்பனென் றுரைக்க
மாதவம் புரியும் மதுரகவிக்கே

* * * *

சேவையு மளிக்கத் திருக்கோளூரான்
ஆவலாய்வந்தே யடிபணிந் தேத்திச்
செத்தத்தின் வயி[த்தி](ற்றி)லே சிறியதுகிடந்தால்
எத்தைத்தின் றெங்கே யிருக்குமோவென்ன
வத்தைத்தான் தின்றே யங்[க](ங)னே கிடக்குமென்
றுத்தரஞ்சொல்ல வுகந்தந்த முனிவன்
வண்சடகோபன் வருமுறை யெல்லாம்
கண்களிகூரக் காரியர்க் களிக்கச்
செய்திடத்தாந் த[ட்](ம்)சேத்திர மேவ
கமமுகில்வண்ணர் வைகுண்ட ரப்போ(து)
செந்தமிழ்ப் பிரபந்தஞ் செப்புமென் றுரைக்க
வந்துநூற் றெட்டு மால் தென்குருகைச்

சேடப்புளிக்கீழ்த் தேசிக ரெம்மைப்
பாடுமென் றுரைக்கப் பராங் குசனப்போ
தருமறைத் தமிழந் தாதி விருத்தந்
திருவாசிரியமு ந் திருவாய்மொழியு
முறைசெயப் பிரபந்த முலகோர்படிக்கப்
பாகதிபெறலால் பிரபந்தமு மிறக்கத்
திருவளர் விஷ்வக் சேனரையழைத்துத்
தரணியிற் பிரபந்தந் தானனிவிளங்க
வாரண முறைக்கு மந்தணராக
வீரநாராயணன் மேவு தலத்தில்
மாதவம்புரியும் நாதமாமுனியாய்த்
தரணியி லுதித்து வருகுவீரென்ன
நாதமாமுனிவரும் போரதொரு மறையோன்
ஆராவமுதனை யருளேதயத்தில்
பாராயணஞ் செய் பிரபந்தந்தனிலா
யிரத்துளிப்பத்து முறைத்ததைக் கேட்டுக்
குருகையைநோக்கி வரவுமே முனிவன்
பரிவுடனந்தப் பராங்குச நம்பித்
திரமாய்க் கண்ணிநுண் சிறுத்தாம் [பன்னீ](பினைநீ)ர்
நேயமாய்ப் பன்னீ ராயிர முருத்தான்
செய்திடுமிப்போ(து) செங்கையில் முத்திரைக்
கையனும்வாரைக் காணலா மென்ன.

**End:**

மனமகிழ்ந்து,

சேஷன்கவி தமிழ்புனையும் பொற்றுள்
அனுதினமும்-அன்பாய்-அடியவர்க்கரு
ளுந்தயாள, உனது
அடிமையென்றிந்த சென்மமு மீடேற
உண்மைசொன்னே னுனதனடிக்கே யாளாக்கும்,
இசைநோக்கும்—தமிழ்வாக்கும்—துயர்நீக்கும் சடகோப,
திவ்விய குணரத்தின தீபப் பிரதாபா!

வசனம். விருத்தம்.

ஞானதேசிகனுமந்த நாதமாமுனிக் குகந்து
தா னவர்பிரபந்த முற்றுந் தா னுரைத்திட்டெந்நாளும்
மாநிலத்தவர்க்குநீரும் மறைத்தமிழ்ப் பிரபந்தந்தேவ
கானமாயுரையுமென்று களிப்புடன் முனிக்குச்சொன்னார்.

*    *    *    *

நாதமாமுனிக்குச்சேவை நல்கியே நம்மாழ்வாரும்
பூதலம்புகழ்ந்து போற்றப்பொற்றாணின் மண்டபத்தின்
மாதவத்திருப்புளிக்கீழ் மஞ்சன மாடி யாதி
நாதனைப்போற்றிசெய்தே நாளுந்தென்குருகை வாழ்ந்தார்.

*    *    *    *

மங்களம்.

மதுரகவி யெதிராசர் மணவாளமாமுனிக்கு
நதிதாமிரபரணி யாதிநாதனுக்கு
பதிமாமறைத் தமிழ்ப்பிரபந்தம் பாடும்
நாதமாமுனிக்கு
கதியருளுந் தென்குருகைக்காரி மாறற்குச்
செயமங்களம், நித்தியசுபமங்களம்.

காரேநிகர் கருணைவள்ளல்காரி ராசேந்திரனுக்குப்
பாருலகிலுடைய நங்கை பாலனுக்கு
மாறன்திரு வண்பரிசாரந் திருவாழ்மார்பனுக்குச்
சீருலவும் புயன்வகுள தேசிகனுக்குச்
செயமங்களம்-நித்தியசுபமங்களம்.

விருத்தம்.

அருமறையின் தமிழ் நாலாயிரமும்வாழி
யர(ங்க)நகர்க் கந்தாடையண்ணன்வாழி
திருவளரும் நாதமுனி யாதிநாதன்
திருக்கோளூர்முனிவன் தென்குருகைவாழி
கருணைவளர் நூற்றெட்டுப் பதியும்வாழி
காசினியிற் சேஷகவிப்பிரபந் தம்வாழி
தருவளருந் தாமிரபர்ணி நதியும்வாழி
தலத்தாருஞ் சடகோபர் நாளும்வாழி.

தரணியில் நம்மாழ்வார் தஞ்சரித்திரந் தன்னையன்பாய்ப •
பரிவுடன் படிப்போர்கேட்போர் பாதமாய் நடிக்கின்றோரும்
நரகரி முகுந்தனாதி நாதநற் கிருபையினாலே
பரகதிக்கன்பராகப் பாருலகாள்வர் தாமே

**Colophon:**

ஸ்ரீ பராங்குச நாடகம் மு[த்து](ற்று)ம்.

The name of the scribe and the date of transcription are given thus :

[illegible]
[illegible]

கொல்லம் [illegible] வருஷம் ஆவணி மீ ௨௨ செவ்வாய்க்கிழமையும் அஷ்டமியும் [illegible] கரணமும்பெற்ற [illegible] நக்ஷத்திரத்துநாள்[யி](இ)ந்த ஸ்ரீ பராங்குச நாடகம் எழுதி முகிஞ்சுது முற்றும். ரெகுநாதாசாரியர் தாஸன் சுந்தரராஜன் எழுத்து. . . . . இந்த ஆழ்வார் நாடகம் ராமாயண சாத்தாதவரும் பார்த்து, சுவாமி ஸந்நிதியிலே அரங்கே[த்தி](ற்றி)னது.

(கு-பு.)--

இந்நூல், சடகோபரென்னும் நம்மாழ்வாருடைய திருவவதாரம் முதலிய வைபவங்களையும், வரலாற்றையும், அவரருளிய பிரபந்தங்கள் நான்கின் பெருமைகளையும் விளக்குவது. இசைப்பாட்டாலாகியது. ஸ்ரீரங்கத்துக் கந்தாடை அண்ணன் என்பவரது சிஷ்யராகிய சேஷ கவியினால் இயற்றப்பட்டது. நூலின் முதலிலுள்ள அகவற்பாவினால் நம்மாழ்வாரின் சரிதம் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

---

## (b) ஆழ்வார் உற்சவப்பாட்டு.

## ĀḺVĀR UṞSAVAPPĀṬṬU.

Foll. 21*a*. Fol. 21*b* is blank.

Incomplete.

Rhythmic songs in praise of the festival of Nammāḻvār celebrated for ten days in the month of Vaiśākha. The colophon given below apparently relates to the work described above.

**Beginning:**

எருதுக்குக் கொண்டாட்டம் திரணம்,—பெண்களிணை
முலைக்கணிவதும் முத்தாபரணம்
டரிதிக்கோராயிரங் கிரணம்-ஆழ்வார்-
பத்தாந்திருநாள் சத்தாபரணம்,
சேவிக்க வாருங்கோள் பெண்காள்.

**End:**

சடகோபர் தாளிணை போ[த்தி](ற்றி)
சகலர்க்குஞ்-சந்தோஷமாகத் திருவிடாயாற்றி
சேவிக்க வாருங்கோள் பெண்காள்—எங்கள்
வாழ்விக்குருகை வகுளாபரணரைச்,
சேவிக்க வாருங்கோள் பெண்காள்.

ஆழ்வார் திருவடிகளே சரணம். ஸ்ரீஜெயநமஃ.

**Colophon:**

இந்த ஆழ்வார் நாடகம் படித்த பேருக்கு ஐச்வரியம் உண்டாம். புத்ர ஸம்பத்துண்டாம். நல்ல ஸ்திரீ உண்டாம். இஹபரஸௌக்யங்களுண்டாம். . . . . . . . . . . . . . ஸ்வாமி ஆழ்வார் ப்ரத்யக்ஷமாக எழுந்தருளியிருப்பர். ஆக இவ்வளவு காரியம் உண்டானபடியினாலே இந்த ஆழ்வார் நாடகத்தை(ப்) பண்ணோடே யிசையோடே படிக்கவும். பண்ணோடே யிசையோடே படிக்கத் தெரியாதேபோனல் தெண்டாகாரமாயாகிலும் படிக்கவும்.

(கு-பு.) —

இது, ஆழ்வாரின் வைசாகோற்சவம் பத்து நாட்களிலும் உபயோகிக்கப்படும் வாகனங்களைப்பற்றிய இசைப்பாட்டு. பத்தாம் திருவிழாவுக்கும், விடாயாற்றி யுற்சவத்துக்குமே இந்தப் பிரதியிலுள்ளன. 20 என்னும் எண்ணமைந்த ஏடு இல்லாமையால் 1-9 திருவிழாப் பாடல்கள் இதிலில்லை.

## R. No. 424.

Palm-leaf. $10\frac{3}{8} \times 1\frac{1}{8}$ inches. Foll. 24. Lines, 4 in a page. Tamil. Slightly injured.

Presented in 1919–20 by Alarmēlmaṅgammaṅgār, wife of Gōvindam Ayyaṅgār, Mēlaittirumāḻigai of Tiruvāymoḻippiḷḷai, Ālvartirunagari.

### (a) நம்மாழ்வார்திருக்கோலக்கவி.

### NAMMĀḺVĀRTIRUKKŌLAKKAVI.

Foll. 1*a*—12*b*. Fol. 1*b* is blank.

Complete.

A poem extolling Nammāḻvār of Tirukkuruhūr by way of describing the greatness of the daily festival celebrated for ten days in the month of Vaiśākha of each year.

**Beginning:**

ஹரி : ஓம் திருக்கோலக்கவிதைக்குக் கடவுள் வாழ்த்து.

நாராயணன்றுள் மிசைவேத நான்குந் தமிழாயுரைசெய்து
பாரா(ர்) துயர்தீர்த்தருள்மாறன் பரனத்தியயனத் திருநாளில்
நேராயணிந்த திருக்கோல திகழ்த்துங்கவிகள் த[ளை](மை)ப்பாடக்
காரார் கருணைமதுரகவி கமலம்புரையுங் கழல்துதிப்பாம்.

திருக்கோலங் கொண்டருளுகிற திருநாட்கவி.

அஞ்சவென வடியவரையாள வேண்டி
யரசர்கள் சிரோமணியாங்காரி ராசன்
தஞ்சிறுவனென வுலகில் வந்துதோன்றித்
தமிழ்மறை யோராயிரமு மருளியாங்கு
மஞ்சரியுலாவு பொழிற் குருகையூரில்
மால்கொளுமார் சார்ங்கமொடு மருவுமாறன்
செஞ்சரணந் தொழுமடியார் தம்மைநாளுந்
தெரிசிப்பார் தாளெனது சிரம்வைத்தேனே. (க)

பல்லக்கில் திருக்கோலம்.

மல்லிகையு முல்லையொடு மருவுவாச
மதுநிறைந்த வகுளமு மென்குழலிற்சூட்டி
யல்லின் வருமுழும்திய முகத்துமாத
ரரும்பரத நடனமிட்டிசைகள் பாடச்
சொல்லியம்பு மறைத்தமிழ் தோடியர்தாமுஞ்
சூழ்ந்திறைஞ்ச ராசரங்கந் தோன்றவேளை
வெல்லவுந் தன்வடிவுகொடு சிவிகைமீது
மேவுமகிழ் மாறனடி விரும்பினேனே. (உ)

**End:**

பத்தாந்திருநாள் பல்லக்கில்.

உம்பர்தொழுமா மாயனரவின் மீதே
யொண்ணுதலார் மலர்மடந்தை யிருதாள்பற்ற
நம்புமடியா ரிடர்கள் களைய வேண்டி
ஞானதித்திரை பொருவு ம(ை)டவுபோல
அம்புவியி லார்ந்தவளக் குருகையூரி
லணிரத்தினப் பொற்கட்டின் மணிகள்சேர்த்துப்
பம்புமொளி சிறந்தவனச் சிவிகைமீது
பராங்கு(ச)னூர் வருமழகைப் பரவினேனே. (உ0)

பலச்சுருதி.

செங்கமலத்திரு மார்பனருள் சேர்மாறன்
திருக்கோலங் கொண்டருளுந் திருநாள்தன்னில்
அங்கவன்ற னுதிமுதற் பத்துநாளி
லணிந்த வெழிற் கோலமதிலாசையாகி
மங்களஞ்சேர் கவிதையெனவரு நாலைந்து
மணவாள மாமுனிவனருளாற் சொன்னேன்
இங்கி[வையை](வற்றை)ப் படிப்பவர்கள் குருகூர்மாற
னிணையடிக் கீழிடைபிரியாதிருப்பர் தாமே.

திருகோலக் கவிதைப் பாட்டு இருபது. பலச் சுருதிபாட்டொன்று. ஆக இந்த இருபத்தொரு பாட்டு(ம்) இந்த ஸம்புடத்தில் இருக்[கு](கிற)தென்று அறியத்தக்கது.

(கு-பு.)—

இது, திருக்குருகூரில், நம்மாழ்வாருடைய திருவிழா பத்துநாட்களின் சிறப்பைப்பற்றிய நூல். காப்பு, பல சுருதிப் பாடல்களுடன் 22 பாடல்களாகியது. இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது.

---

(b) குளந்தைபெருமாளுபசாரக்கவி.

KUḶANDAIPERUMĀḶUPACĀRAKKAVI.

Foll. 13a—15b.

Songs composed by way of respectfully offering of worship to god Viṣṇu in Kuḷandai or Perungulam, a place near Alwartirunagari.

**Beginning:**

ஆசிரியம், உபசார கவி.

நாரணா நால்வேதகாரணா செந்தமிழ்
நாலாயிரக் கவிதையால்
நாவீறர்முதலான வாழ்வார்கள் பதி(ன்)மரும்
நாடோறு மேதுதிக்க
வாராலு மறியாத வோராயிரம் பதத்
[தய்](தை)யனே மலர்(க்)கை[ய்]யனே
யாதாரமாகு தின்பாதா ரவிந்த மல
ர[டு](டி)மைக்கு நிலைமையாமே.

காரார்கு[ள](ழ)ற் கமலைவாரார் தனத்தழகு
    கண்டுமயல் கொண்டமுகிலே
காமித்தகைகேசி நேமித்த கானகக்
    கண்வருகானை வென்றும்
பேராயிரம் முடைசிரீராம நேமிகை
    பிடித்துவி லொடித்துநின்று
பே(ய்)ச்சிமுலையுண்ட நன்மாலாதி மறையவர்
    பெருந்திரு கண்ணுடிநோக்கே. (க)

**End:**

வெண்பா.

சென்னெல்புடை சூழ்குளந்தைத் தேவனெனு மாயவனே
கன்னல்மொழி மாதர்தட்டி கையெடுத்தார்—சன்னிதியில்
அண்டர்தொழ வந்துநின்று ரந் திருவந் திக் காப்புக்
கொண்டருள வேண்டு மருள் கூர்ந்து.

காயாம்பூ வண்ணு கஞ்சமலர்ச் செங்கண்ணு
மாயா குளந்தை வருமாலே—நேயமொடு
மாவனஞ்சூ ழுங்கமல மான்வதுவை செய்வாலி
காவனவா கண்டருளிக் கா.

(கு-பு.)—

இது ஆழ்வார் திருநகரிக்கு அடுத்த குளந்தை (பெருங்குளம்) யென்னும் தலத்தில் கோயில் கொண்டருளிய திருமாலுக்கு உபசாரமாக வியற்றப்பட்ட பாடல்களையுடையது.

இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது. 16 எண்ணமைந்த வட்டில் " இவ்வளவு கண்ணினுள் " என்று தொடங்குஞ் செய்யுளும், பின்புறத்தில் வடமொழி சுலோகமொன்றும் எழுதப்பட்டுள்ளன.

---

## (c) இராமாயணச்சிந்து.

## IRĀMĀYAṆACCINDU.

Foll. 17*a*—27*b*.

Complete.

A kind of rhythmic composition briefly narrating in sixteen stanzas the story of the Rāmāyaṇa. From the last stanza it is made out that the author was Tirukkuruhūr Vaikuṇḍar.

**Beginning:**

சதுரங்க-சேனையுடன் தசரதனும் வரவே
சானகியை மாலையிட்டுத் தளத்துடனே திரும்ப
அதிகோபத்துட னெதிர்த்த முனிபரசு ராமன்
அடல்குலைத் துவில்பறித் தன்புடனே சென்ற
மதிமுகத்தான் ரெகுராமன் மலரடியைப் பரவும்
மாருதிதன்னடி யிணையை மறவாதே மனமே.

**End:**

துலங் கவி[பூ](பீ)ஷணர்க்கு முடிசூ(ட்)டும் ரகுவீரன்
நலமு[கிள்](கூர்)த்தந்தனில் வசிட்டர் வேதியர் முடிசூட்ட(த்)
தாமதமில்லாமல் விண்ணோர் மலர்வாரி[ச்] சொரிய(த்)
தம்பிமார்மூவர் குடை சாமரங்கள் போடச்
சாமிபராக் கென்று சொல்லிக் கட்டியங்கள் கூற(ச்)
சதுர்வேத முழங்கச் சிம்மாசனக் கொலுவிருந்து
பூமிதனை யாளும் ரகுராமரடி பரவும்
புயம்பெரிய மாருதிதன் பொற்பாதந் துணையே
பெருகவி குலத்தரசை ய[ளை](ழை)த்துவரங் கொடுத்து(ப்)
பிரபலமாய்த் தேசமதை யாண்டிருவென் றனுப்பி(த்)
திருவரங்கர்த[னை]க் கொடுத்து வி[பூ](பீ)ஷணரை யனுப்பி(த்)
தேசமதி லாற்லொரு கடமை[ய](க)ளும் வாங்கி(க்)
குருகூர் வைகுண்டன் தமிழ்க்கருள்புரிந் தெ[ன்னு](ந்நா)ளும்
குவலயத்தை யாளும் ரகுராமருமே வாழி
யருகிருக்குந் தம்பியருஞ் சீதையரும் வாழி
யடியிணையைப் பரவனுமனனுதினமும் வாழி. (௰௬)

**Colophon:**

ஶ்ரீராம?. பேரில் சிந்துமுற்றும்.
ஆழ்வார் திருவடிகளே சரணம்.
ராமாயணம் சிந்துப்பாட்டு ௰௬ க்கு ௭௰௪.

(கு-பு.)—

இது, இராமாயணக் கதையைச் சுருக்கமாக விளக்குவது. ஒருவகை யிசைப்பாட்டிற் சேர்ந்தது. திருக்குருகூர் வைகுண்டன் என்பவராலியற்றப் பட்டுள்ளதென இறுதிப்பாட்டால் தெரிகின்றது. இந்தப் பிரதியில் முற்று மிருக்கிறது.

---

R. No. 425.

Palm-leaf. 9½ × 1½ inches. Foll. 138. Lines, 10 in a page. Tamil and Grantha. Slightly injured.

Presented in 1919-20 by Alarmēlmaṅgammaṅgār, wife of Govindāc-cariar, Mēlaittirumāḷikai of Tiruvāymoḻippiḷḷai, Alwartirunagari.

(*a*) ஸ்ரீஶைலநாததிவ்யசரிதம்.
ŚRĪŚAILANĀTHADIVYACARITAM.

Foll. 1*a*—11*b*.
See the Sanskrit part of this Triennial Catalogue.

---

(*b*) பரவஸ்துநிர்ணயம்.
PARAVASTUNIRṆAYAM.

Foll. 12*a*—20*a*. Fol. 20*b* is blank.

States in Maṇipravālà style of composition that Bhaṭṭarpirān or Periyāḻvār established in the court of Vallabhadēva, king of the Pāṇḍia country that god Viṣṇu is the Supreme Brahman and obtained the promised wealth for his high proficiency in the Vēdas and Śāstras.

Complete.

**Beginning :**

ஸ்ரியஃபதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய், கல்யாணகுணாத்மகனான ஸர்வேச்வரன் மகாப்ரளயாவஸானத்தில் "பஹு ஸ்யாம்" என்று ஸங்கல்பித்து, அந்த ஸங்கல்பத்தாலே ப்ருதிவ்யப்தேஜோவா[யுரா](ய் வா)காசாத்மகமான பூதபஞ்சகங்களை ஸ்ருஷ்டித்து, . . . . . . . . . . . . . . தஸ்ய ஹ வா ஏதஸ்ய [க]மாக "நான்முகனை நாராயணன் படைத்தா"னென்கிறபடியே ஸ்வ நாபீகமலத்திலே சதுர்முகனை ஸ்ருஷ்டித்து . . . . . . . . . . . , . . . . தத்த்வாரேண ஸதேவாஸுரமானுஷாதிகளையும் ஸ்ருஷ்டித்து, தத்பரிபாலநார்த்தம் சந்த்ர ஸூர்யாதிகளை ராஜாவாக்கி, அவர்களைக்கொண்டு ஸகல ஜகத்ரக்ஷணம் பண்ணியருளினான். இப்படி ஜகத்ரக்ஷகனான சந்திரவம்சத்தில் . . . . . . . . . . . ஸோமவம்ஶ ப்ரதீபனாய், ஸகலஶாஸ்த்ர ஸகலகலா நிபுண என்று புராணப் பிரஸித்தையாய்ப் புவநதலாலங்காரபூதையான மதுராபுரியிலே தனாய், க்ஷத்ரியாக்ரணியான ஸ்ரீவல்லபதேவ மகாராஜாவானவன், ஒரு நாள் தன் நகரசோதனார்த்தமாக . . . . . . . . . வீதியிலே வரும்பொழுது . . . . . . . . . தேசவாஸி பிராமணன்,

வர்ஷார்த்தமஷ்டௌ ப்ரயதேத மாஸாந்
நிசார்த்தமர்த்தம் திவஸம் யதேத ।
வார்த்தக்ய ஹேதோர்வயஸா நவேந
பரத்ர ஹேதோரிஹ ஜந்மநா ச ॥

என்று பஞ்சமவேதப் பிரஸித்தமான ச்லோகத்தைப்பண்ண, அதைக் கேட்டு ராஜாவும்

**End :**

ஸ்ரீமந்நாராயணன், ஸ்வஸௌசுவருப்ய தர்சனார்த்தமாகக் கிருஷ்ணன், அர்ச்சுனனுக்கு "திவ்யம் ததாமி தே சக்ஷு:" என்று திவ்யசக்ஷுஸ்ஸைக் [கு](கொ)டுத்தா[ப்](ற்)போலே தானும் ராஜாவோடு, செல்வநம்பியோடு, பிரஜைகளோடு வாசியற எல்லாருக்கும் திவ்யசக்ஷுஸ்ஸைக்[கு] (கொ)டுத்து எல்லாருக்கும் ஸேவை ஸாதித்தருளினான். உடனே ராஜாவும், "பல்லாண்டடிண்டோள் மணிவண்ணா" என்று பெரியாழ்வார் மங்களாசாஸனம் பண்ணினபடியே "ஸர்வநாராயண ஸஹஸ்ரஸஹஸ்ரமஸ்து" என்று விஷ்ணுவித்தஸன்னனான அந்த ச்ரியப்பதியை ஸேவித்து, இவனே பரவஸ்துவென்று

நிச்சயித்து, "ஶ்ரீமதே வஜ்ரதேககாரணம் வேதவேத்யம் வரவேதஸே ஷண்ண | நாராயணாதிநிஜஸமாஸ்ரிதம் வாசுதேவநிரம்ஸஹஜாதிதே ||" என்று சரணாகதிபண்ணி, தத்க்ருபா பலமான ஸர்வஶ்ரேயஸ்ஸையுமடைந்து க்ருதார்த்தனானன். இப்படி ஸ்ரீவல்லபதேவ மகாராஜாவையநுக்ராஜீகரித்து(ப்) பெரியாழ்வாரையிட்டு, ஸர்வலோக ப்ரஸித்தமாய், ஸர்வசேதநோஜ்ஜீவந ஹேது பூதமான வஸ்து நிர்ணயம் பண்ணியருளி ஜகத்தை வாழ்வித்தருளி(ன)ன். ஸ்ரீ வடபத்ரராஜனும் ஸடரிகரனாய்க்கொண்டு ஸஹஸ்ரநாமம் விஷ்ணுஸஹஸ்ரம் என்கிற தம்முடைய கோவிலேற எழுந்தருளினர்.

(கு-பு.)—

இந்நூல், ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்த பட்டர்பிரான் என்னும் பெரியாழ்வார், வல்லபதேவனென்னும் பாண்டியவரசன்சபையில் ஸ்ரீமகாவிஷ்ணுவே பரமான் தத்துவப் பொருள் என்று கூறி ஜயித்து அவன் வித்யாசுல்கமாகக் கட்டியுள்ள பணக்கிழியையறுத்தா ரென்னும் பழைய வரலாற்றை விவரமாகத் தெரிவிப்பது. மணிப்ரவாள நடையிலாயது. நூலாசிரியர் இன்னாரெனத் தெரியவில்லை. இந்தப்பிரதியில் இது முற்றுமிருக்கிறது.

---

## (c) கைசிகபுராணம்.

## KAIŚIKAPURĀṆAM.

Foll. 21*a*—42*b*.

Same work as that described under No. 420 of the D.C. T. MSS. Vol. I.

Complete.

(கு-பு.)—

இது டிஸ்கிரிப்டிவ் காட்லாக்கின் 420-வது நம்பர் பிரதி போன்றது. ஆயினும் இதன் முதலில் பூர்வ பீடிகையாக 4 பக்கங்களில் சில விஷயங்கள் எழுதப்பட்டுள்ளன. இந்தப் பிரதியில் இது முன்றுமிருக்கிறது.

---

## (d) கஜேந்த்ரமோக்ஷம்.

## GAJĒNDRAMŌKṢAM.

Foll. 43*a*—56*b*.

Complete.

For the subject-matter of this work see No. 1106 of the D. C. T. MSS. This MS. contains the stanzas in the Adhyāyas 2 to 4 of the eighth Skandha of the Bhāghavata with meaning in Tamil stnaza by stanza and with an introduction.

**Beginning:**

ஶ்ரிய:பதியாய் அவாப்த ஸமஸ்த காமனாய் ஸமஸ்த கல்யாணகுணாத்மகனை ஸர்வேசுவரன்

தேவகார்யாணி ஸர்வாணி க்ருத்வா ஸர்வயாமோ ஜகத்பதி: |

ஸ்வேதவிஷ்ணு ஸரீஸ்ருக்தா ஹரேர்நாமவஸேதஸ்வா ||

என்றும், சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியென்றும்,

அத்யர்கானலதீப்தம் தத் ஸ்தானம் விஷ்ணோர் மஹாத்மந: |

என்றும் சொல்லுகிறபடியே நிரதிஶயதேஜோரூபமான ஸ்ரீவைகுண்டத்திலே . . . . . . . . . . . . . . . . . . . .

* * * *

நம்மை ஆச்ரயிக்க வருவாரோவென்று யோகநித்ரா வ்யாஜத்தாலே அவஸரப்ரதீக்ஷனாய்க் கொண்டெழுந் தருளியிருக்குமளவில், பாகவதோத்தமமான கஜேந்திராழ்வான், ஒரு நீர்ப்புழுவான முதலையின் கையிலேயகப்பட்டு நோவுபட அத்தைத் திருவுள்ளம்ப[த்தி](ற்றி), அம்முதலை கிடந்த மடுவின் கரையிலே வந்து, அவ்வவஸ்த(யைப்) போக்கிப் போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடிறப்பவை பேர்த்துப் பெருந்துன்பம் வேரற நீக்கித் தன்தாளிணைகீழ்ச்சேர்த்து" என்கிறபடியே தன் திருவடிகளிலே நித்திய கைங்கர்யத்தைக்கொடுத்து ரக்ஷித்த மஹாப்ரபாவத்தை அருளிச்செய்கிறார். எங்[க][ங]னேயென்னில் :—

ஆஸீத் கிரிவரோ ராஜந் த்ரிகூட இதி விஶ்ருத: |
க்ஷீரோதேநாவ்ருத: ஶ்ரீமாந் யோஜநாயுதமுச்ச்ரித: ||
தாவதா விஸ்த்ருத: பர்யக் த்ரிபி: ஶ்ருங்கை: பயோநிதிம் |
திஶ: கம் ரோசயந்நாஸ்தே ரௌப்யாயஸஹிரண்மயை: ||

என்கிறபடியே, க்ஷீரஸாகரமத்யத்திலே பர்வதங்களுக்குள்ளே ச்ரேஷ்டமாய் த்ரிகூடமென்று பிரஸித்தமான பேரையுடைத்தாய் . . . . . . .

* * *

அநேக நதீதடாகங்களாலலங்கிருதமான பர்வதத்திலே

**End:**

ஏவம் விமோக்ஷ்ய கஜயூதபமப்ஜநாப:
தேநாபி பார்ஷத(ம)திம் கமிதேந யுக்த: |
கந்தர்வஸித்தவிபுதைருபகீயமாந
கர்மாத்புதம் ஸ்வபவநம் கருடாஸநோ காத் ||

ஸ்ரீமந்நாராயணனு மிப்படிக் கஜேந்திராழ்வானுக்கு ஸாரூப்யத்தைக் கொடுத்து, என்னையும் உன்னையு மிந்த ஸரஸ் முதலான [து](ஸ்தவ)ங்களையும் யாவர் சிலர் பிராதக்காலத்திலே நினைக்கிறார்களோ, அவர்களுடைய ஸர்வபாபங்களும் போம். இந்த ஸ்தோத்ரத்தைக்கொண்டு யாவர் சிலர் என்னைத் துதிக்கிறார்களோ, அவர்களுக்கு ஸர்வோத்கிருஷ்டமான ஜ்ஞானத்தைக் கொடுக்கிறேனென்று அனுக்கிரகித்துக் கஜேந்திராழ்வானோடும் பாஞ்சஜன்யகோஷத்தோடுங்கூடப் பெரிய திருவடி திருத்தோளிலே யேறியருளி, விதிசிவஸனகாதிகளாலே ஸ்துயமானராய்க்கொண்டு தம்முடைய கோவிலேற எழுந்தருளினார்.

**Colophon:**

இதி ஸ்ரீபாகவதே அஷ்டமஸ்கந்தே கஜேந்த்ரமோக்ஷணம் நாம சதுர்த்தோத்யாய:.

ஸவ-ெஉஸஉஸாகாஜெஷ்வ்ராஹதவாஸாகஜா |
ஸாஜாநஜாய-ெஜிவ்ராஜ்ஞாவஜ்-ெதாஜிவஜ்-ெதாஜ ||

ஸ்ரீஜெ ஸ்ரீஜெஸெ கஜெதிஜெ ஸ்ரீஜொகாவாய-ெவாஜெஜாஜெ நஜெ.

திருவாய்மொழிப்பிள்ளை மேலைத்திருமாளிகைப் பெரிய திருவடி ஸ்வஹஸ்தலிகிதம்.

(கு-பு.)—

இது டிஸ்கிரிப்டிவ் காட்லாக்கின் 1106 நம்பரில் வந்துள்ளதே, இதில் வடமொழி பாகவத சுலோகமும் அதற்குப் பொழிப்புரையுமாகவுளது. அங்கு இக்கதை தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இதற்கு முதலில் அவதாரிகை விசேஷமாக எழுதப்பட்டுள்ளது. இந்தப் பிரதியில இது முற்றும் இருக்கிறது. பொழிப்புரையியற்றியவர் இன்னாரெனத் தெரியவில்லை.

---

## (e) மோஹனக்ஷேத்ரமாகாத்ம்யம்.

## MŌHANAKṢĒTRAMÂHATMYAM.

Foll. 57a—63b.

On the greatness and religious importance of Mōhanakṣētra or Tirumōhūr, a place dedicated to the worship of god Viṣṇu under the name Kālamēghasvāmi and situated 6 miles from Madura.

Complete.

**Beginning:**

ஸ்ரீயஃபதியாய் அவாப்த ஸமஸ்த காமனாய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் . . . . . . . . . . . . . . . . . . . . . . .
நித்ய ஸூரிகளுக்குக் காட்சிகொடுத்துக்கொண்டெழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைகுண்டநாதன், அந்த நித்யஸூரிகளோபாதி லீலா விபூதியிலுள்ளாருந் தம்மை ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கைக்கு விரகேதோவென்று பார்த்து,

*   *   *   *

பகவான் அமிர்தப்ரதான ஸமயத்திலே யாதொரு இடத்திலே ஜகந்மோகன வடிவைப் பிரகாசித்தருளின[ன்](னோ) அந்தத்தேசமானது, மோகன க்ஷேத்திரம் திருமோகூரென்று பேரையுடைத்தாயிருக்கும்.

க்ஷெத்ரஜெஹநக்ஷெத்ர ஸவ-ெகாஜெஜஜெஹா |
உதிஸஜெயாஜெஸ-ஃ ஜெஜெஹாஜெஸ-ஸாஃ ||

என்று, பிரமாதிகளான ஸகல தேவர்களும

**End:**

புஷ்பஹாஸ ஸுகுமாரமான இத்திருமேனியோடே ஸவ-ெஜநவக்ஷ-விஷயனுக்கொண்டு நகரி வலம்வருகையில் அஸ-ெயாபாரான பாஷண்டிகளுடைய திருஷ்டி தோஷ பரிஹாரார்த்தமாக சாஸ்த்ரவிஹிதமான புஷ்பயாக பூர்வகமாகக் காப்பிட்டு,

" வகையால் மனமொன்[னி](றி) மாதவனை நாளும்
புகையால் விளக்கால்[ப்] புதுமலரால் நீரால்
திசைதோறமரர்கள் சென்றிறைஞ்சநின்ற "

என்னும்படி ஸர்வோபசார ஸஹிதமான திருவாராதனங்கொண்டருளி அமுது செய்தருளி, ஸேவார்த்திகளாய் வந்த ப்ரஹ்மாதி ஸகலதே வதைகளுக்கும் ஸேவை ஸாதித்து விடைகொடுத்தருளித்து.

ஶ்ரீமோஹநவல்லீஸமேத ஶ்ரீகாளமேகஸ்வாமிநே நம:.
ஶ்ரீமத்ஶ்ரீ[illegible] ஶ்ரீலோகாசார்ய[illegible] நம:.

(கு-பு.)—

இது, மதுரை ஜில்லாவிலுள்ள திருமோகூர் என்னும் திவ்யஸ்தலத்தில் நித்யவாஸஞ் செய்கின்ற ஶ்ரீகாளமேகஸ்வாமியென்னும் திருமால் விஷயமானது. அத்தலத்தின் மகிமையும், அதில் திருமால் வந்திருப்பதற்கு உரிய காரணமும் இதில் விரிவாகவுள்ளன. இது மணிப்ரவாள நடையிலாகியது இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது.

---

## (f) ஶ்ரீஜயந்தீமாகாத்ம்யம்.

## ŚRĪJAYANTĪMĀHĀTMYAM.

Foll. 64*a*—81*b*.

Determines what day in each year should be fixed as the birthday of Lord Kṛṣṇa and deals with the sacredness and importance of religiously observing that day as a holy day.

The stanzas contained in the twenty-seventh Adhyāya of the Skāndapurāṇa with meaning in Tamil of each stanza is given here.

**Beginning:**

> நம: கமலஸம்பூதாய ஸர்வஜ்ஞாநகபஸ்திநே |
> விஶ்வஸ்ருஷ்டிப்ரவீணாய [illegible]ஜ்ஞாநதேஜஸே ||
> ஶ்ரீநாரத உவாச.

ஸ்காந்த புராணத்திலே நாரத ப்ரமருஷி பிரமாவினிடத்தில் நின்றும் சில வ்ரதங்களினுடைய மாகாத்ம்யங்களையும் அனுஷ்டானப்ரகாரங்களையும் கேட்டு, அநந்தரம், ஜயந்தியினுடைய மா(கா)த்ம்யத்தையும், அநுஷ்டான ப்ரகாரங்களையும் கே[ழ்க்](ட்)கக் கடவளுய்க்கொண்டு பிரமாவைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்ளுன்.

> ஜயந்த்யா: ப்ரபவோ மாஹாத்ம்யம் கத்யதாம் ஸவிதாமஹ |
> [illegible] ||

வாரீர் பிரமாவே! யாதொன்றைக் கேட்டுத் தான் பரமபதத்தை அடைவே[ன்](ணே)! அந்த ஜயந்தீ மாகாத்ம்யத்தை எனக்குச் சொல்லுவீராக.

ப்ரஹ்மோவாச:—

> [illegible] |
> [illegible] ||

வாராய் பிள்ளாய்! ஜயந்தியினுடைய மாகாத்ம்யத்தையும் சொல்லக் கேள். இது புண்ய ஜயத்தையும், பாபக்ஷயத்தையும் பண்ணும். . . . . .

* * * *

[illegible] |
[illegible] ||

* * * *

[illegible] |
[illegible] ||

திருவோணத்தோடே கூடின ஏகாதசி அதிகமான பலத்தைக்[கு](கொ)டுக்குமா[ப்]போலே ரோகிணியோடேகூடின அஷ்டமியும் அதிகமான பலத்தைக்கொடுக்கும்.

[illegible] |
[illegible] ||

அர்த்தராத்திரிக்[கி](கு)மேல் ஒரு கலையாகிலும் அஷ்டமி கூடினால் அதில் சந்திரோதயத்தில் வஸுதேவஸுதனை கிருஷ்ணனைத் திருவாராதனம் பண்ணக்கடவன்.

**End:**

[illegible] |
[illegible] ||
[illegible] |
[illegible] ||
[illegible] |
[illegible] ||
[illegible] ||

[illegible] பிரயோஜநாந்தர பரரான ஸம்ஸாரிகளுக்குத் தித்யந்தமான பிராதக்காலத்திலே பாரணை யென்றும், [illegible] முமுக்ஷுக்களுக்கு, உத்ஸவாந்தமான திருவவதாரானந்தர ராத்ரியிலே பாரணையென்று(ம்) விதிக்கப்பட்டது.

[illegible] |
[illegible] ||

முனியே, நீயும் என்னுடைய ஆஜ்ஞையினாலே இந்த ஜயந்தியை அனுஷ்டி. அந்[த்ய](த)த்திலே நிச்சயமாக மோக்ஷத்தையடைவை.

**Colophon:**

இதி [illegible] ஜயந்தீ மாஹாத்ம்யம் நாம [illegible] அத்யாய: |

நமஃ பாரமகஷ்ரண நமஷெ விஷ்ஃமெ |
வாஸுடுெவாய ஸாஜாய யஷுநாஂபகயெநமஃ ||
ஸவஷெஸ . . . . . . . . . . . . குஷிவயகாழ||
. . . . . . . . . . . . . . திருவாய்மொழிப்பிள்ளை மேலைத் திருமாளிகைஸ்வாமி பொன்னய்யங்கார் குமாரன் பெரிய திருவடிப்பிள்ளை ஸ்வஹஸ்த லிகிதம். ஸ்ரீ ஜயந்தி மாகாத்மியம் ஸம்பூர்ணம்.

ஸுஷ்ஹஸ்ரு.

(கு-பு.)—

இது, ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய அவதாரதினத்தின் மகிமையைக் கூறுவது. வடமொழி ஸ்காந்தபுராணத்திலுள்ள ச்லோகங்களும் அவற்றிற்குப் பொழிப்புரையுமாக அமைந்துள்ளது. இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது.

---

## (*g*) வேதவிண்ணப்பம்.

VĒDAVIṆṆAPPAM.

Foll. 82*a*—83*a*. Fol. 83*b* is blank.

See the Sanskrit part of this Triennial Catalogue.

---

## (*h*) ராமாயணபாராயணகாலெபஂநீயஶ்லோகாஃ.

RĀMĀYAṆAPĀRĀYAṆAKĀLĒPAṬHANĪYAŚLŌKĀḤ.

Foll. 84*a*—85*a*.

See the Sanskrit part of this Triennial Catalogue.

---

## (*i*) ராமாவதாரமகிமை.

RĀMĀVATĀRAMAHIMAI.

Foll. 85*b*—89*b*.

Incomplete.

Deals with the greatness and importance of the incarnation of god Viṣṇu as Rāma and of the Rāmayaṇa which relates the story of Rāma.

**Beginning:**

ஸ்ரீயஃபதியாய் அவாப்த ஸமஸ்தகாமனாய் ஸமஸ்த கல்யாணகுணாத்மகனான ஸர்வேச்வரன், வைகுண்டெ து பரெலொகெ ஸ்ரீஸஹாயொஜகநாதஃ | உஹாஹாஂ ஹவிநீஜாஹாஂ ஸெவிதஃ பாரமெஸ்வரஃ என்றும் வைகுண்டெ . . . . . . ஹாமவமெதஸூஹ என்றும், சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதி யென்றும், தெளிவிசும்பென்[னு](று)ம்.

**End:**

யத்தஜெஸஂஷாஹஂ ஷொதவணஷஷஷு ஶஸூதஜஜாணிவாஜஷ ஐகஷாதி ஶ்ருதிவஜதிவாஜஂனன ஸர்வேச்வரன், தசரத

குமாரராய் ராமாத்மநா ஆவதரிக்கையாலே, வேதந்தானும் ஸ்ரீவால்மீகி பகவான் பக்கல் நின்றும் ஸ்ரீராமாயண ரூபேண அவதீர்ணமாகையாலே வ்யாவ்ருத்தமாயிருக்கும். இ(ந்)த ஸ்ரீ ராமாயண ப்ரதிபாத்யனான ஸர்வேச்வரன் விதாம் ரொரவயாரோஸ கரு.ர ஊஹரயஞரவர் என்கிறபடியே.

(கு-பு.)—

இது, திருமால், தசரத சக்கரவர்த்தியின் குமாரராக வவதரித்த பிரபாவத்தையும், ராமாயணத்தின் பெருமையும் தெரிவிப்பது. மணிப்ரவாள நடையிலாவது. இந்தப்பிரதியில் முற்றுப்பெறவில்லை. இயற்றியவர் இன்னாரெனத் தெரியவில்லை.

---

## (j) ராமாயணபட்டாபிஷேகம், தமிழுரையுடன்.

## RĀMĀYAṆAPAṬṬĀBHIṢĒKAM WITH TAMIL COMMENTARY.

Fol. 90a—116b.

Contains the stanzas relating to the coronation ceremony of Rāma; as found in last Sarga of the Yuddhakāṇḍa in Vālmiki's Rāmāyaṇa with meaning in Tamil of each stanza.

**Beginning:**

ஸ்ரிய꞉பதியாய் அவாப்த ஸமஸ்தகாமனாய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனான ஸர்வேச்வரன் ராவணஸம்ஹாரார்த்தமாக வெங்கதிரோன் குலமென்று ஜகத்பிரஸித்தமான சூர்யவம்சத்திலே எல்லையில் சீர்த்தயரதன் தன் மகனாயென்று . . . . . . . . . . . . . . . . . . .

* * * *

ஸஸ்ரீரவாதி ஸகல ஸமிஜந ஸம்வ்ருதராய்(க்)கொண்டு . . .

ஸம்பூர்ணம் ஹர்காஹஜ꞉ என்று ஸ்ரதிஜ்ஞாதமான பதினாலு வருஷமுங் கழிந்து அஞ்சாநாள் ஸுரத்வாஜாச்ரமத்திலே யெழுந்தருளி, முனிவசன ஸந்துஷ்டராய்க்கொண்டு நந்திக்கிராமத்திலே யெழுந்தருளி(ப்) பரதாழ்வானை ஆச்வஸிப்பித்து க்ருதக்ருத்யராய் எழுந்தருளியிருந்தாரென்று பூர்வ ஸர்க்க ஸங்க்ரஹ கதை.

ஶிரஸ்யஞ்ஜலிமாதாய கைகேய்யாநந்தவர்த்தந꞉ ।
பபாஷே பரதோ ஜ்யேஷ்டம் ராமம் ஸத்யபராக்ரமம் ॥

கைகேயிக்கு ஆனந்த வர்த்தகரான பரதாழ்வான், திருமுடியிலே அஞ்சலி பண்ணக்கொண்டு ஜ்யேஷ்டப்ராதாவாய், ஸத்யபராக்ரமசாலியான பெருமாள் ஸந்நிதியிலே ஒரு வார்த்தை விண்ணப்பஞ் செய்கிறார்.

பூஜிதா மாமிகா மாதா தத்தம் ராஜ்யமிதம் மம ।
தத்ததாமி புநஸ்துப்யம் யதா த்வமததா மம ॥

தேவரீர் வனவாசத்துக்கு எழுந்தருளினதினாலே என்னுடைய தாயார் மிகவும் பூஜிக்கப்பட்டாள். தேவரீர் அடியேனுக்குத் தந்த ராஜ்யத்தை அடியேன் மறுபடி தேவரீர் பொ[று](ரு)ட்டு ஸமர்ப்பிக்கிறேன். அங்கீகரித்தருளவேணுமென்று விண்ணப்பஞ் செய்கிறார்,

**End :**

யதார்ஹம் பூஜிதாஸ்ஸர்வே . . . . . . . ஸர்வே ஜக்முர்யதாகதம் ||

அநந்தரம் அக்லிஷ்டகர்மாவான பெருமாளாலே நன்றாக(ப்) பூஜிக்கப்பட்டபேர்களாய்க்கொண்டு சுக்ரீவ விபீஷண ஜாம்பவ ப்ரப்ருதிகளான ஸகல வானரமுதலிகளும் தங்கள் தங்கள் ஸ்தானங்களைக் குறித்துப் பயணம் புறப்பட்டார்கள். . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

ஸுக்ரீவோ வாநரைஸ்ஸார்த்தம் த்ருஷ்ட்வா ராமாபிஷேசநம் |
பூஜிதஶ்சைவ ராமேண கிஷ்கிந்தாம் ப்ராவிஶத்புரீம் ||

அநந்தரம் ஸகலமான வானரமுதலிகளும் மகாராஜரும் பெருமாளுடைய திருவபிஷேக மகோத்ஸவம் ஸேவித்துப் பெருமாளே பூஜித்து அனுப்புவிக்கப்பட்டபேர்களாய்க்கொண்டு கிஷ்கிந்தையில் போய்ப் பிரவேசித்தார்கள்.

விபீஷணோऽபி தர்மாத்மா த்ருஷ்ட்வா ராமாபிஷேசநம் |
லப்த்வா குலதநம் ராஜா லங்காம் ப்ராயாந்மஹாயஶா: ||

விபீஷணனும் . . . . . இக்ஷ்வாகு குல தனமான ஸ்ரீரங்க விமானத்தையும் எழுந்தருளப்பண்ணுவித்துக்கொண்டு லங்காபட்டணத்தைக் குறித்துப் புறப்பட்டான்.

* * * *

ஹ்ருஷ்டா ராமஸ்ய சரிதம் ஸம்ஹிதாமார்ஷிணா க்ருதாம் |
யே ஶ்ரத்தயா ஶ்ருண்வந்தி நரா: தேஷாம் வாஸ: த்ரிவிஷ்டபே ||

ஆர்ஷமான இந்த ஸ்ரீராமாயண ஸம்ஹிதையை யாதொரு[த்த](வ)ர் பக்தியோடே யேறியருளப்பண்ணுகிறார்களோ அவர்கள் த்ரிவிஷ்டபம் என்கிற பரமபதத்திலே சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டென்கிறபடியே பல்லாண்டுபாடியிருப்பார்கள்.

**Colophon :**

இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே யுத்தகாண்டே ஸ்ரீவால்மீகீயே சதுர்விம்ஶத்ஸஹஸ்ரிகாயாம் ஸம்ஹிதாயாம் ஸ்ரீமத்யுத்தகாண்டே ஆதித: ஶததமஸ்ஸர்க:. ஸ்ரீமதே ராமாநுஜாய நம:. ஸ்ரீமத்ஸ்ரீவரவரமுநயே நம:.

(கு-பு.)—

இது வான்மீகி ராமாயணத்துள்ள ஸ்ரீராமபிரான் பட்டாபிஷேக ஸர்க்க சுலோகங்களுக்குத் தமிழில் மணிப்ரவாள ரூபமாக வைஷ்ணவ ஸம்பிரதாயப்படி எழுதப்பெற்ற விரிவுரை. இந்தப் பிரதியில் இவ்வுரை முற்றுமிருக்கிறது. இயற்றியவர் இன்னாரெனத் தெளிவாகத் தெரியவில்லை.

(*k*) குருபரம்பரைத்தனியன்.

GURUPARAMPARAITTANIYAN.

Foll. 117*a*—118*b*.

See the Sanskrit part of this Triennial Catalogue.

---

(*l*) காளமேகப்பெருமாள்கட்டியம்.

KĀḶAMĒHAPPERUMĀḶKAṬṬIYAM.

Foll. 119*a*—137*a*. Fol. 137*b* is blank.

Incomplete.

Eulogistic addresses made at the time of anointing the image of God Viṣṇu worshipped under the name Kāḷamēghapperumāḷ in Tirumōhūr, a sacred place near Madura in the Madura district.

**Beginning:**

பூர்வத்திலே ஸ்ரீயப்பதியாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் ஸர்வேஸ்வரனாய், பரமபத நிலயனாய், அயர்வறுமமரர்களதிபதியாய், வீ[த்தி](ற்றி)ருந்தேழுலகுந்தனிக்கோல் செல்ல எழுந்தருளியிருக்கிற ஸ்ரீமந் நாராயணன், தன்னுடைய பரம கிருபையாலே ஸம்ஸாரி சேதனர்படுகிற கிலேசத்தைக் கண்டு பொறுக்கமாட்டாதே யிரங்கியருளி

* * * *

ஸௌவர்ணகலஶைர்திவ்யைஸ்ஸுவாஸிதஜலைஸ்ஸ்ருதம்
ஸாகேதாஜாம் ஸஹஸ்ரேண ஸாந்திகம் ஸஹஸ்ர|
அக்ஷதஸ்ஸமஸ்ரேணி அபிஷேகம் ஸமாசர
[ஸுவர்ணகலஶை] ஸ்ரீகாளமேகஸ்வாமின் ஸஹஸ்ரகலஶைஸ்ஸஹ ||

நாயி[ன்றே](ந்தே) ஶுக்லாம்பரதரம் விஷ்ணும் ஸமஸ்தானமான அஞ்சன மேனியழகு பொலிய மஞ்சனமாடி யெழுந்த[று](ரு)ளி நிற்கிற தேவரை உள்ளபடியறிந்து ஸத்தை பெற்றவர்கள், ஒரு இந்திரனாக விண்ணப்பஞ் செய்யா நின்றார்கள். எங்ஙனே யென்னில் :—ஸௌவர்ண . . . ஸஹஸ்ர அந்த இந்திரனானவன் ஸாம்ராஜ்யமான ஸ்வர்க்கத்தினுடைய ரக்ஷணத்திலே தீக்ஷிதனுமாய்

**End:**

வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள் என்னும்படி பால் வெள்ளமாய் வாசநறுங்குழலாய்ச்சியர் ம[ற்றி](த்தி)னவோசைபடுத்த தயிர ரவமென்னும்படி தாழி நிறைந்த தயிரைத் தானே நின்று கடைந்து . . .
. . . . . . . .

(கு-பு.)—

இது, திருமோகூர் என்னும் விஷ்ணு ஸ்தலத்தில் எழுந்தருளியுள்ள காளமேகம் என்னும் திருமாலின் திருமஞ்சன காலத்தில் சொல்லப்படும் கட்டியம். ஸ்தோத்திர ரூபமானது. மணிப்பிரவாள நடையிலாயது. இந்தப் பிரதியில் முற்றுப்பெறவில்லை.

---

R. No. 426.

Palm-leaf. 14¾ × 1¼ inches. Foll 32. Lines, 7 in a page. Tamil. Fair.

Presented in 1919–20 by Sundarammā of Alwartirunagari.

## மகரநெடுங்குழைக்காதர்பிள்ளைத்தமிழ்.

## MAKARANEḌUṄKUḺAIKKĀDARPIḶḶAITTAMIḺ.

A kind of Prabandha eulogizing God Viṣṇu worshipped under the name Makaraneḍuṅkuḻaikkādar worshipped in Ten-Tiruppērai. The name of the author is not known ; but he may probably be a pupil or a descendant of Tirumēnikavirāyar or Periya Tiruvaḍikavirāyar whose names are respectfully mentioned at the end of the work.

Complete.

**Beginning :**

குழைக்காதர் பேரில் பிள்ளைத்தமிழ், காப்பு.

ஊருக்கு மாறுமுகத்தோனொ டைம்முகத்தோனுக்குமுப்
பாருக்கு முப்பத்து முக்கோடி தேவர்க்கும் பார்க்கில்மறை
வேருக்கு நான்முகத் தோன்றனக்கும் வியன்தனைசக்கு ?
மாருக்குந்தானந் திருப்பேரைவல்லிக் கடைக்கலமே (க)

* * * *

வெண்பா.

சொற்சேறுந் தேனொழுகுஞ் சொல்லும் பரிமளிக்குங்
கற்றோர்க ளாவுங் கனியுமே—முற்றுமொரு
மாவலிபால் மூவடிமண் வாங்குந் திருப்பேரைக்
காவலவன் பிள்ளைக் கவி.

பூமாதுகுடிகொண்டு வீற்றிருந்தரசுபுரி
பொற்புலவு பற்மாசனப்
பொழிகருணையொடு பெருகிஞானவெள்ளத்தலை
புரட்டுதிரு முத்திரைக்கைக்
கோமானையெழுதரிய சதுமறையுமள்ளிக்
கொழித்துவண்டமிழ்(ப்) படுத்திக்
கூறுதிருவாய் மொழியோர் நாலாயிரஞ்செய்த
குருகைமுனியைப் பரவுதுந்

சேமாநறுங்கனித்தேன் மதகினூடு பாய்
திருவழுதிவள நாடனைத்
தென்றிருப்பேரை நகர் காவலனை நூற்றெண்மர்
சிந்தைகுடி கொண்டிருக்கு
மாமாலைவருணன் வந்தடிபரவுமாழி நீர்
வண்ணனைப்புயல் வண்ணனை
வானப்பிரானை நங்குலநாதனைப் புகழும்
வண்டமிழ்ச் சொற்றழையவே. (க)

* * * *

வானுடரும்பொற் பொகுட்டாசனப்பரம
மண்டபத்தினி திருக்கும்
மறைக்கிழவனுஞ் சடைமுடிக்கடவுளுங்குலிச
வச்சிராயுதத்தலைவனும்,
பூ[ஞ](நா)றும்வெட்சியந் தெரியல்புனை குமரனும்
புகர்முகத்தவனு மதியும்
பொங்கு சுடரிரவியுந் துங்கமுனிவருநெடும்
பொற் கோவில் வலம்வந்து நங்,
கோனும் வருணனாராதனை செய்மஞ்சனக்
கொலுவில் வந்தடிவணங்கிக்
கும்பிடுநின்று சேவிபபநற்சேவைபுரி
கோசலைக்கிருக(ண்)மணியே,
தேனுறுபச்சைப்பசுந் துழாய்மேகமே
செங்கீரையாடியருளே
செல்வத்திருப்பேரை வல்லிக்குமணவாள
செங்கீரையாடியருளே.

**End:**

மருவார்நறுமென்மலர் கொணர்ந்து
வணங்கியிருசேவடி சொரிந்து
மயங்கும் புலன்களைந்து மொன்றாய்
வருணன் செயும் பூசனையுவந்த
திருமாமுகிலே தமிழ்க்குருகுஞ்
செல்வக்குழகா ( · · ) ட்டயர்ந்து
சிறைவண்டலம்பிக் கண்படுக்குஞ்
செழுந்தார்த் துளவபுயமுகுந்தா
வருநான்மறை நூற்றெண்மரும்வந்
தங்கீகரித்து வடம்பிடிப்ப
வம்போரு கப்பூந்திருவு முன்னீ
ரவனித் திருவுமருங்கிருப்பக்
குருமாமணிப்பொன் மருங்கினொடுங்
கொடிஞ்சித்தடந் தேருருட்டுகவே
கொழிக்குந்தமிழ்த்தென் திருப்பேரைக்
கோவே தடந்தேருருட்டுகவே. (ய)

**Colophon:**

சிறுதேர் முற்றும்.

திருமேனி கவிராயர், பெரிய திருவடி கவிராயர் கு[ரு](ர)வே நம.

(கு-பு.)—

இது தென் திருப்பேரையென்னும் விஷ்ணு ஸ்தலத்தில் கோயில் கொண்டுள்ள மகரநெடுங் குழைக்காதர் என்னும் திருமாலின் தோத்திர ரூபமான தொரு தமிழ்ப் பிரபந்தம். இதில் காப்புப் பதினன்கு செய்யுட்களாலும் செங்கீரை முதலான மற்றையொன்பது பருவங்களும் பப்பத்துச் செய்யுட்களாலுமமைந்துள்ளன. ஆகச் செய்யுளின் தொகை ஒரு நூற்று நான்கு. செய்யுள் நடை நன்றாக விருக்கிறது. இந்நூலாசிரியர் இன்னரெனத் தெரியவில்லை. நூலின் இறுதியில் திருமேனி கவிராயர், பெரிய திருவடி கவிராயர் எனக் குறிக்கப்பட்டிருக்கின்றமையால், அவ்விருவர் வம்சத்தினர், அல்லது அவர்களின் மாணுக்கருள் ஒருவராக இருக்கலாமெனத் தோற்றுகிறது. இந்தப் பிரதியில் முதலிரண்டு ஏடுகளில் குழைக்காதர் தோத்திர ரூபமான வண்ணமும் இரண்டொரு பாடல்களும் உள்ளன. இந்தப் பிரதியில் இந்நூல் முற்றுமிருக்கிறது. 22, 23 என்னும் எண்ணமைந்த ஏடுகளின் முன்புறம் முறிந்துள்ளது.

---

## R. No. 427.

Palm-leaf. 12¾ × 1⅝ inches. Foll. 16. Lines, 8–10 in a page. Tamil. Good.

Presented in 1919–20 by Sundarammā of Ālvārtirunagari, Tinnevelly district.

(*a*) **வைத்தமாநிதிப்பெருமாள்விடுகவிதை.**

VAITTAMĀNIDIPPERUMĀḶVIḌUKAVITAI.

Foll. 1—5*b*.

A number of stray stanzas, probably composed by the same author at different times, in praise of God Viṣṇu worshipped under the name Vaittamānidipperumāḷ in Tirukkōḷūr in the Tinnevelly district.

Contains 19 stanzas.

**Beginning:**

சுவாமி வைத்தமாநிதிப்பெருமாள் பேரில் விடுகவிதை.

விண்ணும் புவனமுங் கொண்டாட மாறன் முன்பேசும் வி[ரி]ரு
தெண்ணும் பொருள் முற்றும் பட்டோலை கைக்கொண்டெழுதி [வெளிப்)
பண்ணுந் திறத்தினிற் கைம்மாறுண்டோ நம்பழவடியார்
கண்ணுங்கருத்து நிறைந்தாய் மதுரகவித் தெய்வமே. (க)

விருத்தம்.

துதிதவமுஞ் செழுந்தமிழா லறிவிலரை முகந்திருத்தித்
[து](தொ)டர்ந்து வெந்தீக்
கதிதவமுங் கொடு நரகுக்கிலக் காகிய[ளை](லெ)வேற்குக்
கடைக்கண் பாராய்

நிதிதவழு மடமகளிர் விளையாடு மணிமாட
நீடுமேல் வான்
மதிதவழுந் திருக்கோளூர் வைத்தமாநிதியே
பூமடந்தையானே.

**End :**

குணங்கித்திரியு மறிவினர் குணத்தை யறிந்துமவர்களுட
னிணங்கித்தனியாய்(ப்) பசிதணிக்கு மியல்பாயலைந்து திரிவேனோ
அணங்கிற் கழுதவடிவழக ளுமென்ற[ழு](ள)லகக் கதிபன்முடி
வணங்கி(த்)துதிக்குந் தமிழ்ப்புகுழூர்வாழ்வே வைத்தமாநிதியே.

சரிவண்டிலங்கு மூன்கை வனிதையர்க்குள் மயங்கித்தயங்கியன்பு
புரிவண்டனுக்கு ஞானம் புத்திபோதித் தெனையாட்கொள்வாயோ
தெரிவண்டிடங்கா நடுங்கமடுச் சினையாமையின மீதூரில்
(வரி)வண்டிசை பாடும் புகுழூர் வாழ்வே வைத்தமாநிதியே.

(க-பு.)—

இது, திருக்கோளூர் என்னும் விஷ்ணு ஸ்தலத்தில் அமர்ந்துள்ள வைத்த மாநிதியென்னும் திருமால் விஷயமான தோத்திரம். இந்தப் பிரதியில் பத்தொன்பது பாடல்கள் உள்ளன. இந்நூல் முற்றுப்பெற்றதாகத் தோன்றவில்லை. எளிய நடையினுலாயது. இயற்றியவர் பெயர் முதலியன விளங்கவில்லை.

---

## (b) சடகோபதிவ்யசரித்திரம்.

## ŚAṬAKŌPADIVYACARITTIRAM.

Foll. 6a—16b.

A treatise giving an account of Nammāḻvār or Saint Śaṭhakōpa, the author of the well-known Tiruvāymoḷi. The work appears to be subdivided into several Paṭalas. The name of the author is not known.

Contains the Nāṭṭuppaṭala, Nagarappaṭala and breaks off in the Tirukkuruṅguḍippaṭala.

**Beginning :**

ஹரி ஓம் ; நன்றாக குருவே துணை.

சடகோபதிவ்விய சரித்திரமூலம்.

ஆசாரியர்கள் வணக்கம்.

நீர்மைகொண் மெய் யடியர் பர வடியுஞ் செய்ய
திறங்கொடு பொற் றிருவரை யி னிலவுந் தூசும்
மார்பிலகு மணிவடமுந் திகழ்[மு](பூ)ணூலு
மரைமலர்ச் செங் கரத்தினிடை வளர் முக் கோலுஞ்
சீர்கெழுபாட் டிய முரைத்த பவள வாயுஞ்
சேதனர் பா லருளொழுகு திருக்க ணோக்கும்
ஏர்கொடிரு முகத்தொளியு மிலங்க நின்ற
வெதிராசன் விரைமலர்த் தா ளிறைஞ்சியுய்வாம். (க)

வேறு.

மதுரவின் சுவையின்மேலாய் மறைத்தமிழுரைத்தஞான
வதுலன் தன்சரிதைகூற வருந்தணையாகும் வாசப்
பதுமமேலயற்கு மேனாட் பாலனத் துருவமாகிச்
சதுமறை நவின்றமாயோன் ஞட்டிணைக் கமலப்போதே.

வேறு.

மணிகொணெடுந் திரையாழிப் புடவி மாது
மதிமுகவொண் டில தமெனவயங்கு மாடத்
தணிதிகழ்தென் குருகையினு வீறன் மாற
னருண்மாரி வைபவமென் னறிவாற் சொல்லத்
துணிகுவனின் ன முதிலெழு திருவே பிம்பத்
துவரிதழ்ச் செந் தாமரை மேற் றுலங்கு மானே
பணிமொழி மென் குயிழ்மறிந்து குழைபாய் கைவேற்
படைமதர்க் கட் கடையருணீ பாலிப் பாயே. (௩)

(* * * *)

தேனினமுரன்றுபாடு மகிழ்மலர்த் தெரியல்வேய்ந்த
ஞானதேசிகனுரைத்த நான்மறைத்தமிழ்ச்சுடர்க்கு
மேனியைத் தகழியாக்கி மெய்யறிவிடுநெய்யாக்கி
மானிலம் விளங்கச்செய்த வரவரமுனி தாட்கொள்வாம். (கஉ)

அவையடக்கம்.

நந்தணிமகரயாழ்க்கை நங்கையார் குழவி சேர்த்திச்
செந்தமிழ் தனி(ய)ஞுயேன் செப்புவானெடுத்துக்கொண்ட
அந்தகவ் ககனமீனை யைய மற்றெணுவேனென்ன
வந்தவாறமையு மு[ன்னீ](ந்நீ)ர்கவயக மதனின்மாதோ. (கச)

(* * * *)

அவையடக்கம் முற்றும்.

நாட்டுப்படலம்.

சீர்வளரெதிராசன் பொற்றிருவடிக் கமலம்போற்றிக்
கார்வளர் மேனியெம்மான் கண்ணையுற்றுயிர்களுய்ய
ஏர்வளர் மாறனகவெழுந் தவதாரஞ்செய்யும்
பார்வளரிசைகொள் செல்வப் பாண்டி நாட்டணிவிரிப்பாம். (க)

உலகெலாந் தனிப்புரக்குமுயர் மழைமுகிற்குழாங்க
ளலை விலாதரியதிம்ப யோததியெனவான் சென்று
பலவளம்பெருகு தெண்ணீர்(ப்)ப[ற](ர)வைநீர்பருகிச்சூலாய்
நிலவியதாளமீனு நீனிறக்கடல்போன்மீண்ட. (உ)

(* * * *)

கோடினோடந் திகிரியுங் கொண்டுமேல்
ஈடிருமரைக் கண்ணிடையிற்பசு
மாடுமேவி ம[ரி](றி)கடற் சேர்தலால்
ஓடுமெப்புனல் நாரணனொக்குமால். (௧௦)

மலேகளூந்திடை மாதரைச்சேர்ந்துமீ
துலேகுருந்த மொசித்து மருதிற்போய்
விலேயுயர்ந்திடுமொன் பினமேவலால்
அலேகொளப்புனல் கண்ணனையன்னதே. (௧௧)

**End:**

இவ்வணமகிழ்ந் தினிதிருந்தருள் சுரந்து
நவ்விநயன[து](ம்மு)டைய நங்கையொடு நீலப்
பவ்வவலேசூழ்புவி புரிந்துமுறைசெங்கோல்
செவ்விதினியற்று பொழுதுற்றதுரைசெய்வாம். (௩௭)

**Colophon:**

திருநகரப்படல முற்றுப்பெற்றது.

ஆகப்படலமிரண்டுக்குக்கவி அ௫. திருஞானமுத்திரை துணை.

திருக்குறுங்குடிப்படலம்.

வெண்டிரைகறங்குங் கடனிலேவரைப்பின்
மிடைந்துயர்ப்பயி . . . : டுக்கலியா
மண்டுவெங்கதிரோன் மிக்குடல்வெதும்பி
யழிதராதல கலின்ஞான
மண்டுவிண்மாரிபெ . . . . . தருளிய
ராமாநுசன்றாட்டு (ணை)வணங்கி(க்)
கொண்டல்கண் படுக்குந் தண்டலேயுடுத்த
குறுங்குடிப்படல மின்றுரைப்பாம். (௧)

(* * * *)

துப்பித(ம்) . . . . டளவிள முகையணிமுறுவற்
றேகை நன்னெறியிலோர்மகவைக்
கைப்பெறினேழுபிற(ப்பினு)மியற்றுங்
கடும்பவந்தொலேத்து மாவிரதைக்
கப்புறமிருத்து மெனிற்புவிதுறந்தா
ரணிய முற்றைம் பொறியடக்கித்
தப்பிலதுடலங் கருகவைந்தழலுட்
டவஞ்செயல்தரும் பயனெவனோ. (௫)

(த-பு.)—

இந்நூல், நம்மாழ்வார் என்னும் சடகோபரது வரலாறு முதலியவற்றை விளக்குவது: நாட்டுப்படலம், நகரப்படலம் முதலாகப் பல படலங்களையுடையது. செய்யுள் நடை நன்றாக இருக்கிறது. இந்தப் பிரதியில் முதலிரண்டு படலங்களும், மூன்றாவதான திருக்குறங்குடிப் படலத்தின் முதலைந்து பாடல்களுமேயுள்ளன. இது இத்தனை படலங்களையுடையதென்றும் இயற்றியவர் இன்னாரென்றும் விளங்கவில்லை.

## R. No. 428.

Palm-leaf. 16 × 1¼ inches. Foll. 76. Lines, 4-8 in a page Tamil. Injured.

Presented in 1919-20 by Sundaramma of Āḷvārtirunagari.

---

### (a) சுப்பிரமணியமந்திரம்.
### SUBBIRAMANIYAMANTIRAM.

Deals with the Mantra relating to God Subrahmaṇya.

Complete.

**Beginning:**

ஓங்-ஆங்-அவ்வும். இருங்-இறீயுங்-குரேங்-அய்யுங்-கிலீயுங்-குரோங்-கிலீயுங்-சவ்வுங்-சரவணபவ சத்தியுத்தாய் - திரிபுரபவகுக்குடத்துவசாய - திக ெ[ள](மு)ாளிபவ- . . . . . . . . .

சுப்பிரமணியாய நம ஓம் சரவணபவ.

* * *

புன்னிரு குழையும் பணிபல வாகி
வயிரத் தோடும் மகரகுண் டலமும்.

**End:**

அண்டர்கள் பிரானுர் மைந்தன் அறுமுகனருளுங் கெங்கை
கை[ய்]யில் குழையே தென்னில் கந்தன்வேல் தழைத்த[கோ]காப்பு.

அய்யர்தா னுண்டநஞ்சை யமுதாக்கிய சஞ்சீவி
மெய்யினில் விசாதிபோக்க வேலவன் தந்தசஞ்சீவி.

அய்யனுர் தமையனுரான மைத்துனனுர்
அறுமுகவனுர் தந்தசஞ்சீவி காணே.

(கு-பு.)—

இது முருகக்கடவுளின் மந்திர சம்பந்தமானது. இந்தப் பிரதியில் முற்று முள்ளது.

---

### (b) தனிப்பாடல்.
### TANIPPĀḌAL.

Fol. 3a. Fol. 3b is left blank.

A stanza extolling the means of obtaining salvation by the practice of Jñānayōga.

**Beginning:**

மாபெல்(லைத்) தின்றிறந்தாலு முத்தியோ
மரமட்டை தின்றுழலுவீர்
மண்கேடீனுமை சலமூழ்கில் முத்தியோ
வருந்தியே சலமூழ்குவீர்,
ஆடுதழை சருகுதின்றிறந்தாலு முத்தியோ
யடவியிற் சருகுதின்பீர்

**End:**

ஊடுவழியூடுருவி நாடிவழி யூடே
யுள்ளொழுகி மண்டியுயிர்போ
யுறையும்வகை யறியாமலுழலுமவ ருபதேச
[யு](வு)ண்மையிது காணுக்குமே.

(கு-பு.)—

இந்தப் பாடல்; கருமயோகத்தால் மோக்ஷமடைய முயல்வதினும் யோகாப்பியாஸஞ் செய்து முத்தியடைவதே நன்றெனத் தெரிவிப்பது.

---

## (c) விக்கிரமசோழனுலா.

## VIKRAMAŚŌḺANULĀ.

Foll. 4*a*—6*b*.

Contains only 31 Kaṇṇis.

Same work as that described under R. No. 279 of the Descriptive Catalogue of Tamil MSS.

(கு-பு.)—

இந்நூல் டிஸ்கிரிப்டிவ் காட்லாக் 279-வது நம்பரில் வந்துள்ளதே. இந்தப் பிரதியில் ஒன்றுமுதல் முப்பத்தொரு கண்ணிகளே யுள்ளன.

---

## (d) கம்பராமாயணப்பாடல்.

## KAMBARĀMĀYAṆAPPĀḌAL.

Fol. 7.

Contains only three stanzas from the well-known Kambarāmāyaṇa.

(கு-பு.)—

இதில் கம்பராமாயணப் பாடல்கள் மூன்றேயுள்ளன.

---

## (e) தனிப்பாடல்.

## TANIPPĀḌAL.

Fol. 8*a*. Fol. 8*b* is left blank.

Contains two stray stanzas.

(கு-பு.)—

இதில் இரண்டு பாடல்கள் உள்ளன.

---

## (f) எம்பெருமானார்நெஞ்சுவிடுதூது.

## EMBERUMĀNĀRNEÑJUVIḌUTŪDU.

Foll. 9*a*—14*b*.

Fol. 15*a* contains a stanza of an astrological nature. Fol. 15*b* is left blank.

An artificial poem of the Śabda-citra variety, extolling the greatness of Rāmānuja.

Incomplete.

**Beginning:**

எம்பெருமானார் நெஞ்சுவிடு தூது.

சீதார்ந்த வண்கருணைச் சீபெரும்பூ தூர்முனிமேற்
றூதார்ந்து நெஞ்சுவிடு தூதினுக்கு—வாதார்ந்த
வஞ்சமல மில்லா மகிழ்மாற னுருடைய
கஞ்சமலர்த் தாளிணையே காப்பு.

வாதியரை வென்றுதினம் வாழ் பெரும்பூ தூர்முனிமேற்
சோதிவிடு நெஞ்சுவிடு தூதினுக்கு—நீதியுடன்
வாழ்வா ன துபெருகும் வண்குருகூர் மாறன்முத
லாழ்வார்கள் தானே யரண்.

கற்றவர்தங் கண்ணுடி(க்) காதிவரும் வாதியரைச்
செற்றுவரும் வேதாந்தச் சிற்றுய—னற்றவர்சே
ரேதமொன்று மில்லா வெதிராசன் சேவடிக்கே
தூதுவிட்டே னெஞ்சைத் துணிந்து.

* * * *

சீரார் செழுங்கமலச் சேயிழையார் சேர்ந்திலங்குங்
காரார் திருமேனிக் கண்ணபிரான்—ஏராரு
முந்திக் கமலத்து நான்முகனை யுண்டாக்குஞ்
சிந்திக்குங் கார(ண)மே சித்தமே—வந்திதன்
னெஞ்சமே நீயென்னை நேராகக் கைவிட்டாற்
றஞ்சமே யாகுந் தகைமையார்—அஞ்சலெனத்

**End:**

. . . . . . . . . மறைகொள்ளும்
வேதியர்த மூர்தோறும் வெற்றிக் கொடிபுனைந்து
வாதியரை வெல்ல வருந்தாதே—

(கு-பு)—

இது, வைஷ்ணவ ஸித்தாந்தப் பிரவர்த்தகராகிய இராமாநுஜர் விஷய மாக வியற்றப்பட்ட ஒருவகைப் பிரபந்தம். அவரது பக்தருள் ஒருவர், அவரை அடைய விரும்பித் தமது மனத்தைத் தூது செல்ல விடுத்ததாக வமைந்துள்ளது இந்நூல்; இந்தப் பிரதியில் இது முற்றுப்பெறவில்லை, இயற்றியவர் இன்னாரெனத் தெரியவில்லை. 15-வது ஏட்டின் முற்புறத்தில் பஞ்சபக்ஷி சாஸ்திர விஷயமான பாடலொன்று எழுதப்பட்டுள்ளது.

---

## (g) கம்பராமாயணப்பாடல். KAMBARĀMĀYAṆAPPĀḌAL.

Foll. 16a—19a.

Contains certain stanzas taken from certain Paṭalas of the Kambarāmāyaṇa. The names of these Paṭalas are Mitilaikāṭcippaṭala, Kārmukappaṭala, Sētubandanappaṭala.

(கு-பு.)—

இதில், மிதிலைக்காட்சிப் படலம், கார்முகப்படலம், சேதுபந்தனப்படலம் ஆகிய விவற்றினின்று எடுத்தெழுதப்பட்ட சில பாடல்களுள்ளன.

---

## (*h*) தனிப்பாடல்.
## TANIPPĀḌAL.

Fol. 19*b*.

A collection of certain select stanzas. The first of these stanzas is in praise of God, stanzas 2 to 4 are in praise of Nammāḻvār; stanza 5 gives the names of some of the sacred shrines dedicated to the worship of God Viṣṇù.

**Beginning:**

கடத்தடக்கைக் கோட்டுக் கதத்தத்தி செற்ற
இடத்தடக்கைக் கோ(த்திரத்)தைச் செப்(பா)—(தடற்பிடி)க்குப்
பிச்சித் தொடைசூட்டிப் பெற்றதே தப்பேதைக்
கிச்சைத் தொடை கொடாதே. (க)

**End:**

குடந்தை குருகூர் குறுங்கை யன்பிலா
வி_ந்திகழ் புல்லாணிறைக்கூர்?—மடம்பூண்
டரதீன்ற? கஞ்ச வனந்தேவி வாணிக்
கிரை நூல் மாகீரஞ் சூமோ? (ரு)

(கு-பு.)—

இதில் 2, 3, 4, எண்ணமைந்த மூன்று வெண்பாக்கள் நம்மாழ்வார் துதியாகவும், 5-வது வெண்பா விஷ்ணு ஸ்தலங்களின் பெயரை யுணர்த்துவதாகவும், முதலது கடவுள் தோத்திர ரூபமாகவும் அமைந்துள்ளன. இயற்றியவர் இன்னாரெனத் தெரியவில்லை. ஈற்றதாகிய வெண்பா மிகப் பிழையுடன் காணப்படுகிறது.

---

## (*i*) கழிநெடிலாசிரியவிருத்தம்.
## KAḺINEḌILĀŚIRIYAVIRUTTAM.

Fol. 20*a*. Fol. 20*b* is left blank.

Expresses herein the supplicant's desire to become the servant of God Śiva who is herein requested to protect the supplicant from being led away by the tempting allurements of wicked women.

**Beginning:**

கொங்கையால் விழியா லெவளையு மருட்டிக்
கூடியே யவன்னகயிற் பணத்தை(யும்) பறித்துக்
கொள்ளைகொண் டதற்பின் வகையில்லை யென்றால்
கொட்டிக்கொண் டவன்கையி லோட்டையுங் கொடுத்துப்

* * * *

**End :**

சங்கரா மருதம் பிடைதனி வமய? மநத்ததுதையா வுடைத்
தலைவனே கருவூர் முனியுடன் பேசிய சம்புவே சாந்தநா யகனே.

(கு-பு.)—

இச்செய்யுள், பக்தரொருவர், துட்டவேசையர் மீதுண்டாங் காதலை மாற்றித் தன்னை யாட்கொள்ளுமாறு சிவபிரானை நோக்கிப் பிரார்த்தித்ததாக வமைந்துள்ளது.

---

## (i) ஆழ்வார்திருவனந்தல்.
## ĀLVĀRTIRUVANANDAL.

Foll. 21*a*—23*a*. Fol. 23*b* is left blank.

A poem in praise of Saint Śaṭhakōpa, also well-known as Nammāḻvār. The poem is in the form of lullaby songs sung to make Nammāḻvar go to sleep. The name of the author is not given.

**Beginning :**

பொருவரிய தவநிலை புரிந்தரியை வாழ்த்துவோர்
புரவியரி கதி[ர]ருதய மாகுமுன் குணபாலி
னருணவுதை யங்கண்டு தண்பொருனை நீரி[ல்]
[நீரா](லா)டியிசை பாடிநின் சந்நிதியி லே[ற்ற](த்த)லாற்
கருணைமழை பொழிமேக மேதிரு வனந்தலோ
கமலநய நாரவிந் தா(?)திரு வனந்தலோ
திருவழுதி வளநாட னேதிரு வனந்தலோ
செண்பகச் சடகோப னேதிரு வனந்தலோ. (க)

**End :**

கொங்கலரு மணிமுறுக் குடையநறை மழைதூவு(ங்)
குமுதமுகை யாகவிது வுடலமும் வெளுப்பவே
சங்கின முழங்கவண் டிசைபாட மயிலேறி
தனதுகொடி யொடுகெருங் கொடிபல விசைத்ததால்
நங்கையக மகிழ்மாற னேதிரு வனந்தலோ
நாவணர்தம் பிரா னேதிரு வனந்தலோ
செங்கமல மலராச னுதிரு வனந்தலோ
செண்பகச் சடகோப னேதிரு வனந்தலோ. (க)
தென்குருகை மகிழ்மாற னேதிரு வனந்தலோ
செண்பகச் சடகோப னேதிரு வனந்தலோ.

(கு-பு.)—

இது, திருக்குருகூரில் அவதரித்த நம்மாழ்வார் என்னும் சடகோபர் விஷயமான தோத்திரம். "செண்பகச் சடகோப னேதிரு வனந்தலோ" என்பதை மகுடமாக வைத்துப் பாடப்பட்டுள்ள டன்னிரண்டு பாடல்களாலாகியது. இந்தப் பிரதியிலுள்ள இவ்வேடுகளிரண்டும் நுனி முறிந்துள்ளன. இதனை இயற்றியவர் இன்னாரெனத் தெரியவில்லை.

## (k) அழகரகவல்.
## ALAGARAHAVAL.

Fol. 24.

A kind of poetic composition called Ahaval in praise of God Viṣṇu worshipped under the name of Aḻagar in Tirumālirumśōlai, near Madura. God Aḻagar is conceived as Lord and the person wishing to attain salvation is conceived as falling in love with God and this work is allegorical in nature.

**Beginning:**

தோயுங் கல்வித் துறைமுடிவு திரம்பி
யாயுங்கலைக ளறுபத்து நான்கு
மாசறவுணர்ந்த தேசபுரி கொள்கை
சிலச்சொலும் பான்மை நலத்தகை . . . .
மின்னவிர் கிரணப் பொன்னுலகு நீங்கு

**End:**

பணைக்கை வெண்மருப்பு நினைத்து நின்றியங்கியும்
பின்னியிடைவிடாத பன்னக முயங்கியுந்
தடமயங்கு சின்னெறி மட . . . . ட்டால்
வரைத லன்றி வருத
லுரைபகர் முறையோ வுணர்ந்தரு ணீயே.

சிலம்புதித்துறைவன் திருவடிகளே சரணம்.

(கு-பு.)—

இவ்வகவல் திருமாலிருஞ்சோலை அழகர்மீது அகப்பொருட்டுறை யமையப் பாடப்பட்டுள்ளது. செய்யுள் நடை நன்றாகவுளது. இயற்றியவர் இன்னாரெனத் தெரியவில்லை.

---

## (l) தனிப்பாடல்.
## TANIPPĀḌAL.

Fol. 25*a*. Fol. 25*b* is left blank.

A collection of stray unconnected stanzas.

**Beginnin; :**

மானே கிளியே மயிலே குயிலே வரிவண்டே
கானே சுனையே கழையே வழையே கனியாறே
யானே றுடையா . . . . . . சென்றடையார் போ
லூனே வருமே யுயிரோ வெனுமே யுய்யாவே.

* * * *

* * * *

உத்தமன் முத்தானத்தினிடத் தோருற்பல
மற்றோருயர் மாலைத
வித்தகனெத்தானத் திலுதிற் போன் வெற்பு
நெறிக்கே மீ[ம்](ள்)வானே
சித்ரமுலைக்கே முத்து நகைக்கே செற்று தழற்கே
திருவான[ப்]
பத்திவிழிக்கே நெய்த்த கவிற் கேபட்ட
றுதற் கேபட்டே[ா]னே.

* * *

சங்கு துயில்கின்ற வெண்கமல மொன்று
தண்கலைமடந்தை தகுமாதைப்
புங்கவன்விளங்கு பம்பை நதி வந்து
புந்திமகிழ்கின்ற புள்ளீரே
யெங்களுயிரென்று முங்களுயிரனறு
மிங்ஙினிவி . . . . . . .
. . . . . . . . . . . . . .
. . . . . . . .

(கு-பு.)—
இவ்வேட்டில் சிற்றின்ப விஷயமான ஐந்து பாடல்களுள்ளன.

---

(*m*) நிகண்டு.
NIGAṆḌU.

Foll. 26*a*—29*a*. Fol. 29*b* is left blank.

A lexicon of synonymous words. Contains the words from அ to ஐ. The work appears to be different from Divākaram and Piṅgaḷam though it resembles them in several places.

**Beginning:**

பதினொன்றாவது ஒரு சொற்பல் பொருட் பெயர்த்தொகுதி.
அமரருங் கவிகளுமாடுவாரும் பாடுவாரும்
பொரு நருமறிஞரு(ம்) புலவரெனப்படுமே.
அலரி பூமலருமருக்கனு மாகும்.

**End:**

ஏவல்வியங்கோளு மாணையு மாகும்.
ஏற்றல் கோடலு மெதிர்ந்து பொருதலும்.
ஏணை வலியு நிலையு(மு)டைமையுமாகும்
ஏவல்மெய்ப்பாடு வாஞ்சனை ருளோ
யானைவயு(ம்) விறல் செயலு மாணைக் கிளவி
ஏனைய தொழிவு மிடைச் சொல்லுமாகும்.
ஏணியுலகு மெல்லையுமாகும்.
ஐயம் பலியுமோர் தலுமாகும்.

(கு-பு.)—

இது, சேந்தன் திவாகரம், பிங்கலம் ஆகிய இவற்றினும் வேறுகியும் சிற் சிலவிடத்து ஒப்புமையுடையதாகவு மிருக்கிறது. இந்தப் பிரதியில் அகர முதல் ஐகாரம் வரையுளது. இயற்றியவர் இன்னுரெனத் தெரியவில்லை.

---

(n) தனிப்பாடல்.

TANIPPĀḌAL.

Fol. 30.

Contains 4 stray unconnected stanzas. Two stanzas deal with errotics, one stanza gives the names of the 9 wives of Jīvakan and the other stanza is in praise of a wealthy person named Kōnēriyappan.

**Beginning:**

மாவுறங்கின புள்ளுறங்கின வண்டுறங்கின தண்டலைக்
காவுறங்கின வின்ன மென்(ம)கள் கண்ணுறங்கில[ல்] (ள்)கையனைக்
கோவுறங்கு கடத்தலைக்குல தீபவள்ளோ குதட்டதின்
ருவுறங்கு புகாரசஞ்சல வஞ்சலென்னவடுக்குமே.

**End:**

உற்பாதகமா யொருமுத வென்ருேரகத்தே
திற்பாரிருந்த திருநெல் வேலி நாடனையீர்
சொற்பாலனையவுங்கள் தோகை தோழ(ற்) சேருதற்குப்
புற்பாய் பரியாகப் போதக் கடவேனே.

(கு-பு.)—

இதில் சிருங்கார விஷயமான பாடல் இரண்டும், ஜீவகன் மனைவியர் ஒன் பதின்மர்பெயரையுணர்த்தும் பாடலொன்றும், கோனேரியப்பன் என்னும் பிரபுவின் விஷயமான பாடலொன்றும் ஆக நான்கு பாடல்களேயுள்ளன.

---

(o) ஆழ்வார் துதி.

ĀḺVĀRTUDI.

Foll. 31*a*—32*a*. Fol. 32*b* is left blank.

Contains 8 stanzas in praise of Nammāḻvār of Tirukkuruhūr; stanzas 5, 6 and 7 are the same as those found in subdivision (*h*).

**Beginning:**

பேழ்வாய் மறலியின் குன்றுலென் மேல்வரும் பெற்றி முற்றுந்
தாழ்வாயல்லாது பலிக்குங் கொல்லோ சகதண்டமுட்ட
வாழ்வார்பரம்பரையாய்த் தமியேன் பொன்மதிட் குருகை
யாழ்வார்க்கடிமை பொலிந்து நின்ருருக்கு மப்படியே. (க)
ஒன்றுமிரு வினைமும்மையு மேற்ப தொழிந்திட நான்
குன்றும்படிக்கை வராறுமுகா தெழுகோளையெட்டி
னின்றுமிருந்தங் கிடந்தொன்பதாகி நிறைந்த பெம்மா[ன்]
னென்றும் பதி(ன்)மர்தொழுங்குரு கூரில்வந் தெய்துவனே. (உ)

**End:**

வெளவீரவாழியோ வீயாவயலீர்வா
ள(வ்)வீரவேல் விழியோ வாள வா ளாழ்வாரே
யல்லொழியா யழியாயுயிரா யிளவா
வல்லே வருவீர் வரில்

இது இடையினப் பாட்டு இடையினம் ய, ர, ல, வ, ழ, ள வெனவாறே.

கோக்காக்கைக் காகாக் கூக் கூக்லகக்கக் கொக்காக்லக
காக்கைக்கே கூகைக்குக் கைக்காக்காக்—காக்கைக்காக்
கைகைக்கோக் கைகை(க்)கைக் [க]கூக்காக்கை கேகாக்கோக்
கைகைக்கே கூக்காக்கை கை.

(கு-பு.)—

இது திருக்குருகூர் நம்மாழ்வார் மீதுபாடப்பட்டுள்ள சில சித்திரக்கவிகள் அடங்கிய துதி. முதலில் மூன்று கட்டளைக் கலித்துறைகளும் பின்னரைந்து வெண்பாக்களுமாக எட்டுப்பாடல்களையுடையது. 5, 6, 7, பாடல்கள் இந் நெம்பர் (h)ல் வந்துள்ளவைகளே.

---

## (p) கோவைசாரம்.

## KŌVAISĀRAM.

Fol. 33. Foll. 34*a*—40*b* are left blank.

Contains some important and select stanzas taken from Tañjaivāṇankōvai and other such works. Contains 1 to 9 stanzas and a portion of the 10th stanza.

**Beginning:**

கோவைசாரம்.

மாவின் கொழுந்தளிரீன்று பொற்கோங்கிடை வந்தரும்பி
மேவுங்கமல மலர்ந்தல்லி பாய் விம்முதேன் பொதிந்து
தாவுஞ் சிலவரி வண்டினங் கொண்டு தளைய விழ்பூங்
காவின்புறம்படர் வல்லிகண்டேகண் க(ளி)க் கின்றதே. (க)

காழ்பட்டகண்டா கடம்பாடவி நின்ற கன்னியிட
மூழ்பட்ட தெண்டிரையோ வரையோ பொன்னுலகு மற்றே
வீழ்பட்டதாமரையோ விவர்தாமிங்குமேவ வங்குப்
பாழ்பட்ட தெவ்விட மவ்விடம் யாதென்று பார்த்திலமே. (உ)

**End:**

செறிவே[ள](ழ)வெஞ்சிலை வேள்தஞ்சை வாணன்றிருந்தலர்மே
லெறிவேலைவென்ற கண்ணென்னுயிர்க் கேவியிருண்டறல் போல்
நெறிவேயல(ங்)கல் முடித்தலை சாய்த்திங்[க](ங)ளிற்பதுதா
னறிவேயறிந்தவுனக்கலர் மாளிகை யாரணங்கே. (கூ)

வழுதியர் நாமம் வளர்க்கின்ற வாணன்றென் (மாறை வண்டு)

(கு-பு.)—

இது, தஞ்சை வாணன் கோவை முதலிய கோவை நூல்களினின்று தொகுக்கப்பட்டுள்ள சாரமான பாக்களையுடையது எனத்தோற்றுகிறது. இந்தப்பிரதியில் 1—9 பாடல்களும், பத்தாவதன் முதலடிமட்டுமேயுள்ளன.

---

## (q) மாறன்கலம்பகம்.
## MĀṞANKALAMBAKAM.

Foll. 41*a*—68*b*.

A kind of Prabandha called Kalambakam dealing with the greatness of Nammāḷvār. The author's name cannot clearly be made out but he appears to be a Vaiṣṇava Brahman of Tirukkuruhūr.

**Beginning:**

கார்பூத்த மேனிக்கரிய நெடுமால் மார்பிற்
சீர்பூத்தகஞ்சத் . . . . . கந்தொழுங் கருணைப்
பார்பூத்ததிருக் குருகைப்பதிவாழு நாவலவன்
வார்பூத்தகோ . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . மிலங்கத்
தார் பூத்தகுழல் மட(வா)ர் தண் கவரி தான் வீசக்
கோடாதசெல்வக் கொழுங் கொ . . . . . . . .
. . . . . . . . . , இருப்புவிக் கீழ் வீற்றிருக்கு
மாறன் பொருனை வழுதி வள நாடான்
. . . . . . . . . . தான்றயங்க
வன்பான நூற்றெட்டு வாலையத்தே . . .
. . . . . . . . . .
. . ரன் பாருலகுதரப் பொன்னுலகின்
ம . . . . . . . . . . . . ;
. . . . . . ; மாறனே கேட்டருளீர்.
தாவுமுற்றும்.
தேவாதி தேவர் தொழுஞ் செல்வத் திருக்குருகை
. . . . . . . . . மாறனே. (க)

* * * *

அருள்பெறு சதுமறையது தமிழெனவுரை
பொருள் பெற நினைவொடு புயலென வுதவினை. (க)
இமையவர் தொ . . . . . துகையிலு தவினை
யமையவுமறை தமிழது வென வருளினை. (உ)
மருவியகுருகையிலொரு முதலெனவளர்
குரு . . . . . . . . . . வருள் குறையறவுத வினை. (ங)
கலியுகவரதரு மிவரென வுலகினின்
மெலிவற வளர்புகழ் மிகு நிழன் மருவினை. (ச)
. . . பொழிலுறை குருகையிலருள் பெறு
சதுமறை விழைவது தழையவு முதவினை. (ரு)
இவையைந்துமராகம்.

**End:**

கலித்துறை.

ஆரையராவும் விழியான தென்னெஞ்சயர்ந்துவிட
வாரை . . . . . . . . . . . மடவீர் மகிழ்மாறர் வெற்பிற்
றுரையராவுங்குழல் சோரமேகலை தானவிழப்
பே ரையராவுங் கலவியெ [ன்று](ந்நா)ளும் பொறுக் . . . .

வெண்பா.

எ[ன்று](ந்நா)ளுமிச் செனன மெடுத்துவாட் கொண்டு
பன்னாட் பரமபதம் பாலிப்பாய்—முன்னாளின்
மூண்டவினைபோ . . . . . . . வ[ய](வ)ாழ்வாரே
யாண்டவனே நின்று ளருள். (௯௯)

கலித்துறை.

பேர்வாழி சொன்ன கலம் பகம் வாழிப்பெருமறை நூற்
சீர் . . . . . . மையங்கள் வாழி திருநகரி
யூர்வாழி நற்றமிழ் நாவாணர் வாழியுலகனைத்துங்
கார்வாழி ஞானச் சடகோபர் வாழியெக் காலமுமே. (௱)
தெய்வநாயகன் திருவடிகளே சரணம்.

**Colophon:**

சுவாமி ஆழ்வார் திருவடிகளே சரணம்.

பாவே(ய்)தமிழன் குரு கூரன் வேதம் . . . வுரைத்த
தாவேதமென்ற தனுட்பொருள் யாவுந் தரந் தெரிந்து
மாவேதரணிக்குள் மேலாம் பரனெனு மாறனையிக்
காலே தடையின்றிப் போற்று நெஞ்சேயக்கதி பெறவே.

(த-பு.)—

இந்நூல் திருக்குருகூர்ச் சடகோபர் விஷயமானதொரு வகைப் பிரபந்தம். நடைநன்றாக விருக்கிறது. இந்தப்பிரதியின் ஏடுகளிற் சில முறிந்துள்ளமையால் இடையிடையே சிலசில பாகமில்லை. நூலாசிரியர் திருக்குருகூரிலிருந்த ஒரு ஸ்ரீ வைஷ்ணவரென்று தெரிகின்றதன்றி, அவரது பெயரைக்குறிக்கும் செய்யுளேடு முறிந்துள்ளமையால் பெயர் நன்கு புலப்படவில்லை. இந்தப் பிரதியில் இந்நூல் முற்றுமிருக்கிறது.

---

## (ர) மாறன்பதிகம்.

MĀṞANPADIKAM.

Foll. 69*a*—71*b*.

A poem in ten stanzas in praise of Māṟan, also called Saint Śaṭhakōpa or Nammāḻvār.

omplete.

**Beginning :**

இனமுறவரவே தொழுவெதிர் செலவே
[வி](யி)ரு விழி புனலோ வடிவது விலகா
ரனமெனு நடையார் துயாதுபெ . .
. . பவரெவரோ விதிவசமெனவே
கனமதுவயர்வே கருதவும் வசமோ
கருணையின் மகிழ்மாறரு மொழி . . .
மனமுறுகுரு காபுரி சடகோபர்
மலரடி துணையே வகுப்பதுதினமே (க)

**End :**

மன தினிவிருப்போர் வண்சடகோபர்
வகுளாபரணர் வளர்புளி வாசர்
கனதையில் திருவாய்மொ(ழி) . . . வோர்
காரணர் மாடத்திருக்குருகூரர்
தன திடம் வேதத்தமிழாகரனர்
தாயும் பொருளைத் திருச் . . . கணி
. . . . . . . . . . . ரிமையோர்குருபரர்
இலைக்கொரு தெய்வமா நமைப்பாலெனவே. (ம)
சுவாமி ஆழ்வார் திருவடிகளே சரணம்.

(கு-பு.)—

இப்பதிகமும் திருக்குருகூர்ச் சடகோபர் விஷயமானதே. இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது. நூலாசிரியர் இன்னாரெனத் தெரியவில்லை.

---

## (8) நம்மாழ்வார்துதி.

## NAMMĀḺVĀRTUDI.

Foll. 72*a*—74*b*.

Similar to the above.

Incomplete.

**Beginning :**

இந்தமதிகாய வெந்துசருகான தெந்தவகை பாவமே
வந்தசடகோபர் தந்தமகிழ் மாலை . . . சூடவே
சிந்தமதஅாய னின்றுகணை தூவு சிந்தையயர்வாகுவே
கந்தமலர் வாவிதண்பொருனை . . . . (க)
அத்தியிற் பெருத்தசித்திர மொத்த நற்றனத்தி நட்பு
மற்பமர்ச்சனைக்கு ளொப்ப . . யிர்ச்சிமிக்கவுற்றபட்ச
மொத்த புத்திபட்டுழற்று மக்கிர முற்றதே
சித்திபெற்றதற் பரற்குளி . . ட்டி மட்டளித்த சித்த.

**End :**

நேசம் விரும்பிய . . நீதி புகுந்தன்ர்தாள்
பூசைவிரும்பிய தேசுபரம் பரபோதமடர்ந்தவனே
யாசரு . . . விரும்பியயாதியர் தன்பத மேல்
வாசமெனுந் தொடையாகிய நம் . ளி மரமகிழ்தி . . . . . (ம)

(கு-பு.)—

இப்பதிகமும் சடகோபரது தோத்திரரூபமானதே. ஏடுகள் சிதைந்துள்ளமையால் சிற்சில பாகமில்லை. இயற்றியவர் இன்னாரெனத் தெரியவில்லை,

## R. No. 429.

Palm-leaf. 11⅜ × 1½ inches. Foll. 84. Lines, 8—11 in a page. Tamil. Slightly injured.

Presented in 1919-20 by Sundarammā of Alwartirunagarī, Tinnevelly district.

### (a) மதுரகவியாழ்வார்பேரிற்கவிதை.

### MADURAKAVIYĀḺVĀRPĒRIṞKAVITAI.

Fol. 1*a*. Fol. 1*b* is left blank.

A poem in praise of Madurakaviyāḻvār, the disciple of Nammāḻvār or Saint Śaṭhakōpa.

Contains 4 stanzas, two stanzas of which being written in Veṇbā metre and the remaining two belonging to the Kaṭṭaḷaikalitturai variety.

**Beginning:**

மதுரகவியாழ்வார்பேரிற் கவிதை.

வெண்பா.

புவிப்புலவர் வாழ்த்தும் புகுழூர் மதுர
கவிப்புலவர் ஞானக் கனியே—செவிக்கு
முழுதுந் தெளியமுதே முக்கனியே முன்னீ
யெழுதுந் தமிழா யிரம். (க)

கலித்துறை.

விண்ணும் புவனமுங் கொண்டாட மாறன்முன் வேதம் விரித்
தெண்ணும்பொருள்முற்றும் பட்டோலைகைக்கொண்டெழுதிவி[ளி](ழி)
பண்ணுந்தரத்தினிற் கைமாறுண்டோ நம்பழவடியார்
கண்ணுங்கருத்து நிறைந்தாய் மதுரகவித் தெய்வமே. (உ)

**End:**

வெண்பா.

போற்றினேன் மாயப் புலைச்சன்ன மத்தனையு
மாற்றினே னந்தாம வாழ்வுபெற்றேன்—ஏேற்றும்
விதுரனிடஞ் சென்ற விருந்தனடி யேத்து
மதுரகவி தாட்டா மரை. (ச)

(கு-பு.)—

இது, திருக்கோளூர் என்னும் திவ்ய க்ஷேத்திரத்தில் அவதரித்து நம் மாழ்வாரை ஆசாரியராக அடைந்த மதுரகவியாழ்வார் விஷயமானது. இரண்டு வெண்பாக்களும், இரண்டு கலித்துறைகளுமாக நான்கு பாடல் களே இதில் உள்ளன.

---

### (b) மாறன்சிங்காதனக்கவிதை.

### MĀṞANSIṄGĀDANAKKAVITAI.

Foll. 2*a*—4*b*. Fol. 5 is left blank.

A poem in praise of the throne on which Nammāḻvār is sitting in Tirukkuruhūr or Alwartirunagari.

Contains 12 stanzas.

**Beginning:**

சிங்காதனக்கவிதை.

மாறன் சிங்காசனமான தவாவியவ்வாவியி[ல்த்](ற்)றே—
னூறுஞ் செந்தாமரை பொன்மேனியம்மல ருற்றுநறை
யாறென்கலாந் திண்புயமாலேபூம் பொருட்டையன்முக
வீறென்கலா மதிற்க[ஸ்]த்தூரி நாமம்விளரி வண்டே. (க)

குடிவாழநங்கை குடர்வாழத்தென்குரு கூரினம்பி
வடிவாகநீவந்த வாறுகண்டோமகிழ் மாறநின்பொன்
னடிவாழ்வுபெற்ற பொற்சிங்காதனந் தனக்கம்முதற்பேர்
பிடியாதபேரென் றுடஞ்சயரியணைப் பேர்பெற்றதே. (உ)

* * * *

**End:**

வெண்பா.

சிந்தையினுஞ் சென்னியினுஞ் சேர்த்தினேன் பெற்றெடுத்த
தந்தையினுந் தாயினும்வந் தாதரித்தான்—செந்தமிழ்நா
வீறன்சிங் காசனத்தில் வீற்றிருக்குங் காரிமகிழ்
மாறன் பதத்தா மரை.

* * * *

விருத்தம்.

பன்னகாசனத்தர் திருமாலாதி நாதனேயே பாடிப்போற்று
மன்னவாகனமாற ரடியிணையைத் தொழுதோறு மதனுலன்றே
வன்னமாமணியழுத்து [நவரெற்றி](ரத்)ன[ச்] சிங்காசனத்தில்வரு மகி
[மைகாண
வென்னமா தவம்புரிந்தான் தென்புதுமூர் மதுரகவி யெம்பிரானே. (௰உ)

(கு-பு)—

இது, நம்மாழ்வாருடைய சிம்மாசனத்தின் சிறப்பை விளக்குவது. முத
லில் 4 கட்டளைக்கலித்துறையும் இரண்டு ஆசிரியவிருத்தங்களும், சந்தவிருத்த
மொன்றும், அறுசீர்க்கழிநெடில் விருத்தமொன்றும், கலித்துறையொன்றும்,
வெண்பாவொன்றும், கலித்துறையொன்றும், விருத்தமொன்றும் ஆகப்
பன்னிரண்டு பாடல்களையுடையது. 6-வது ஏட்டின் முன்புறத்தில் திருக்குரு
கூர் ஆதிநாதசுவாமி 8-வது உற்சவமாகிய குதிரைவாகனச்சிறப்பின் 5-வது
பாடலின் பிற்பகுதியும் ஆறுவதுபாடலும் எழுதப்பட்டுள்ளன.

---

## (c) குருந்தவாகனக்கவிதை.
## CURUNDAVĀHANAKKAVITAI.

Fol. 7*a*. Fol. 8 is left blank.

During the festival of Nammālvār, celebrated in Tirukkuruhūr, the image of Nammālvār is placed on a vehicle resembling the Kurundai tree and is carried in procession through the streets and the stanzas are in praise of the vehicle representing the Kurundai.

Contains 3 stanzas.

**Beginning:**

கலித்துறை.

அருந்தரிதாமொலி நீராழிசுற்று மவனியெல்லாம்
வருந்தி யலைந்துழலா துனைப்போற்ற மகிழ்ந்தருள்சீர்
பொருந்தியதென் குருகா புரிவாழப் பொலிந்துயர்ந்து
குருந்தேறி வீதிவரு மச்சுதானந்த கோவிந்தனே. (க)

**End:**

கருவரிவேல்விழிக் கார்முகில்கூந்தனற் கன்னியர்கள்
மருவித்தடாகந் தனிலேவிளையாடல் வந்துகண்டு
முருகுநறுவனமணிக் குருகூரன் முதுகுருந்தின்
தருவினிதிற்றுகில் கவர்ந்துகொண்டேறினன் காக்கினன்றே.

(5-பு.)—

இது, திருக்குருகூரில் ஆதிநாதசுவாமியுற்சவத்தில் குருந்தமர வாகனத்தின் சிறப்புணர்த்துவது. மூன்றுபாடல்களாகியது. இந்த ஏட்டின் பின்புறத்தில் ஆழ்வார் உற்சவத்துப் பத்தாவதுநாளில் வெட்டிவேர்ச்சப்பரத்தின் சிறப்புணர்த்தும் பாடலிரண்டு எழுதப்பட்டுள்ளன. 9-வது ஏட்டின் முன்புறத்தில் திருக்குருகூரிலுள்ள சேனைமுதலியார் விஷயமான தோத்திரச்செய்யுள் ஒன்று எழுதப்பட்டுள்ளது.

---

## (d) கிருஷ்ணன்திருக்கோலக்கவிதை.
## KRṢṆANTIRUKKŌLAKKAVITAI.

Fol. 10.

In praise of Ādināthasvāmi of Tirukkuruhūr who is adorned and made to appear like the figure of Krṣṇa in the festival celebrated at Tirukkuruhūr.

Contains 5 stanzas.

**Beginning:**

கிருஷ்ணன் றிருக்கோலக்கவிதை.

கலித்துறை.

நாறுத[ற்](க்)கோலக்குழலாளசோதையென்னப்பிறுகஞ்
சீறுதற்கோபன்கெடுநாள்வெங்கானந்திரிந்தவுடம்
பூறுதற்கோகண்ணுறங்குதற்கோமண்ணையுண்டவெதுப்
பாறுதற்கோவெண்டயிர்வாரிவாரியருந்தியதே. (க)

**End:**

விண்ணனைத்துந் தொழுமாலாதி நாதனைவீசுமழை
வண்ணனைச் சுந்தரத்தோ[ழ](ள)னைநான்குமறைத் தமிழ்ச்சொற்
பண்ணனைத் தென்குருகூரனை வண்டுபடர்கமலைக்
கண்ணனைக் கண்டுகொண்டே னும்பர்நாடெங்கள் கைவசமே. (ரு)

(ரு-பு.)—

இது, திருக்குருகூர் ஆதிநாதஸ்வாமியின் உற்சவத்தில் கிருஷ்ணதிருக்கோலத்தின் சிறப்பைக்கூறுவது. இந்தப்பிரதியில் ஐந்துபாடல்களே உள்ளன.

(*e*) ஆதிநாதர்தண்டிகைக்கவிதை.

ĀDINĀTARDAṆḌIKAIKKAVITAI.

Fol 11.

In praise of the palanquin and palanquin festival of Ādinātha, a form of God Viṣṇu, worshipped in Tirukkuruhūr.

Contains 6 stanzas.

**Beginning:**

வெண்பா.

வண்டிகைக்குந் தண்டுளவ மாலே நின் சேவைக்குந்
தண்டிகைக்கும் வேறு தரமுண்டோ—கண்டிகைக்கும்
பெய்யம் புளகடலாம் பேருவகை யாலடியார்
மெய்யம் புளக மெழு மே. (க)

தண்டிகையி லேறிவருந் தாமோ தரக்கனியை
வண்டிகைக்குந் தண்டுளவ மாமுகிலைக்—கண்டு
பருகாத கண்ணும் பணியாத கையு
முருகாத நெஞ்சுமுள வோ. (உ)

**End:**

கலித்துறை.

விண்டிகைவாழிந்திரன் முதலோர்கள் விரும்பியவர்
கண்டிகையாமற் பாவியிப்பாரவர்[க்]காதலிப்ப
வண்டிகையார் கொங்கைப்பூங் கோதைநாதன் வருங்கனக
தண்டிகைசசேவைக் கெதிரிலைப்போற்ற முத்தாரணிக்கே (சு)

(கு-பு.)—

இதுவும் ஆதிநாதப்பெருமாளின் தண்டிகையுற்சவச்சிறப்பைப்பற்றியதே. ஆறுபாடல்களாலாயது.

---

(*f*) ஆதிநாதர்வாகனமாலை.

ĀDINĀTARVAHĀNĀMĀLAI.

Foll. 12*a*—13*b*.

In praise of the different vehicles used in the course of the festival of Ādinātha, a form of Viṣṇu, worshipped in Tirukkuruhūr.

Contains only the benediction stanzas.

**Beginning:**

வாழி திருக்குருகூர் வல்லியார் நீடூழி
வாழி பொலிந்துநின்ற மாமாயன்—வாழிபசந்
தண்ணிலஞ்சி மாலைத் தமனியக்குன் றென்னிரண்டு
கண்ணிறைந்த ஞானக் கடல். இதுவெணபா. (க)

கலித்துறை.

திருவாழி யாழிப் பிரான்வாழி சேடத் திருப்புளிப்பூந்
தருவாழி கல்விச் சடகோபன் வாழி ததியர்க்கெல்லாங்
குருவாழி நாதமுனிவாழி தென்குருகூரிலின்னம்
பெருவாழி காரிப் பெருமானு நங்கைப் பிராட்டியுமே. (உ)

* * * *

**End:**

மாமாறன் பாதம் வழுத்துந் திருக்குருகூர்ப்
பாமாறன் வாழிமறைப் பாவாழி—யாமாறு
மூதூர் வழிதிறந்து முத்தியடி யார்ககருளும்
பூதூரன் வாழி பொலிந்து (எ)

(கு-பு.)—

இது, திருக்குருகூர் ஆதிநாதப்பெருமாள் திருவிழாவில் வாகனங்களின் சிறப்பை விளக்குவதெனத் தோற்றுகிறது. இந்தப்பிரதியில் வாழ்த்துப் பாடல்களேழுமட்டுமே யுள்ளன.

---

## (g) ஆதிநாதர்சிங்காசனக்கவிதை.
## ĀDINĀDARŚIṄGĀSANAKKAVITAI.

Fol. 13. Fol. 14 is left blank.

In praise of the throne of God Adinātha of Tirukkuruhūr.

Contains 5 stanzas.

வெண்பா.

சந்ததம்வா னோர்போற்றத் தந்தச்சிங் காசனத்தில்
வந்து பொலிந்துநின்ற யாதவனைச்—செந்தமிழாற்
பாடிப் பணிந்து பரமபதத் தையென்றுந்
தேடித் தொழுவாய்நெஞ் சே. (க)
இந்திரனோர் போற்ற விலங்குபொற்சிங் காசனத்திற்
சந்திரகருமேக சாமளம்போல்—விந்தைபெற
வந்தகுரு காபுரிவா[ள்](ழ்)மாலாதி நாயகனைச்
சிந்தனையாய்ப் போற்று நன்னெஞ் சே. (உ)

**End:**

ஆதித்த மண்டலமோ வாடரா மண்டலமோ
வாதித்தபேரிதய மண்டலமோ—போதித்த
வந்தப் பொற்சிந்தை யகலாக் குருகூரன்
தந்தப்பொற் சிங்கா சனம். (ரு)

(கு-பு.)—

இது, திருக்குருகூர் ஆதிநாதப்பெருமாள் சிங்காசனச்சிறப்பை விளக்குவது. ஐந்துபாடல்களாலாயது.

இதன் 15-வது ஏட்டில்,

தளர்ந்தே கோ னூன்றுமட்டுந் தருணமட்டு(?)நீண்டு
வளர்ந்தேனுன் சிந்தித்து வாழ்ந்தேன்—செழுந்தேன்
துளிக்குமகிழ் மாலைச் சடகோபா குந்த
மளிக்குந் தருணமிது வாம்.

தளர்ந்தே னுனைப்பணிந்துன் தா[ழ்](ள்)தொழுதேன் செல்வம்
வளர்ந்தேன் சிறியனேன் வாழ்ந்துங்—களந்தேன் (?)
தென்குருகூர் மாறு தெரிசித்தே னென்னைவிடாய்
நன்குபெறப் பண்ணுவது ழும்.? என்னும் நம்மாழ்வார் விஷய

மான பாட விரண்டுள்ளன. 16-வது ஏடு வெற்றேடு.

---

## (h) வைத்தமாநிதிசுவாமிதிருப்பணிமாலை.
## VAITTAMĀNIDISUVĀMITIRUPPAṆIMĀLAI.

Fol. 17.

Gives some account of the persons who built the different portions of the temple of Vaittamānidhipperumāḷ in Tirukkōḷūr.

Contains only 1 to 5 stanzas.

**Beginning:**

நீர்பூத்த மலர்த்தடஞ்சூழ் திருக்கோளூர் வைத்தமா
நிதிக்கன்பாகச்
சீர்பூத்து விளங்குகெர்ப்ப கிரகமுகத்தழகிய
திவ்வியவிமான
மேர்பூத்த நவமணியா லுண்டாக்கிப் பூசை
செய்தானெதிர்த்தோரஞ்சப்
போர்பூத்த பெருந்திறற்கு(ப்)பொன்வளந்
திகழளகை புரக்கும் வேந்தே. (க)

சன்[ன](னி)தியிற் கெருடேசன் வீற்றிருக்குங்
கோயிலுஞ் செந்தமிழ் நூல்வாய்த்த
வின்னிசையோர் கொண்டாடுஞ் சேனையர்கோன்
கோயிலுமுன் னியல்பாய்க் கண்டு
செந்நெல்வயற் புகுமூரர் திருவுளத்தின்
படிக்குமகா சிறப்புச்சேர்த்தான்
பொன்னுலவு தமிழளகாபதி(தனக்)கு(ப்)பொன்
வடபால் புரக்கும் வேந்தே. (உ)

**End:**

சோலைமலர்த் தடம்புடைசூழ் புகுமூராரகமகிழத்
தூய்தாமன்ன
சாலைமடைப் பள்ளியுநீ[ழ்](ள்)குடவறையு
மமைத்துமுது தமிழ்க்கோளூரிற்
பாலமதன் மேல்புறத்து நிலமும் விடுவித்து
வெகு பரிவுசெய்தான்
வேலையுலகம்புகழும் வரகுணமா மங்கையில்
மீனவர்கள் கோவே. (ரு)

உல . . . . . . . . . . . . .

(கு-பு.)—

இது, திருக்கோளூர்வைத்தமாநிதிப்பெருமாள் ஸந்நிதி முதலியவற்றைக் கட்டுவித்தவர் பெயர் முதலிய வரலாற்றைத் தெரிவிப்பது. இந்தப் பிரதியில் முதலைந்து செய்யுட்கள் மட்டுமேயுள்ளன.

(*i*) வரமங்கைநாதன்துதி.

VARAMAṄGAINĀTANTUDI.

Fol. 18*a*. Fol. 18*b* is left blank.

A eulogy on Dēvanātha, a form of God Viṣṇu, worshipped in the shrine at Vānamāmalai.

Contains 1—3 stanzas.

* * * *

**Beginning:**

. . . . . . . . . . . . . . . . . . . . . . .

அந்தணரைப் பெரியோரைப் பரமசிவனடியாரை யகந்தையாகச்
சிந்தைதனிலே நினைந்து மனதுருகியன்பர் நிதந்தேடுவோர்க்கு(ப்)
புந்திதனிலேயிருந்து நினைத்தவர[ம்](வ்)வைகுண்டம் புகுவர்தாமே. (க)

**End:**

உலகமெலா மோரடியா யளந்தநாதன்
உண்பதந்? தங்கள்மனது இக்குநாதன்
சிலையைய யுருவாக்கிவைத்த தேவநாதன்
சிரீவர மங்கைக்குகந்த தேவநாதன்
அலைகடலில் பள்ளிகொள்ளவ [ழ](ளர்)ந்த நாதன்
ஆயிரநாமம் தரித்தவாதி நாதன்
மலையெனவே வ[ழ](ளர்)ந்த வரமங்கை வாழும்
வாணுவர மலைநாதன் நாதன் தானே. (௩)

(கு-பு.)—

இது சிரீவர மங்கை (வானமாமலை) யென்னும் விஷ்ணு ஸ்தலத்தில் அமர்ந்துள்ள தேவ நாதன் என்னும் திருமால் விஷயமான தோத்திரம். இதில் மூன்று பாடல்களேயுள்ளன. முதற்பாடலின் முதலடி இந்தப் பிரதியில்லை.

---

## R. No. 430.

Palm-leaf. 9½ × 1 inches. Foll. 138. Lines, 4 in a page. Tamil. Injured. Old.

Presented in 1919-20 by Sundarammā of Alwartirunagari.

(*a*) 𑌲𑌕𑍍𑌷𑍀𑌹𑍃𑌦𑌯𑌸𑍍𑌤𑍋𑌤𑍍𑌰𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃.

LAKṢMĪHṚDAYASTŌTRAMANTRAḤ.

Fol. 1*b*.

See the Sanskrit part of the Triennial Catalogue.

---

(*b*) 𑌲𑌕𑍍𑌷𑍀𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃.

LAKṢMĪMANTRAḤ.

Foll. 2*a*—4*b*.

See the Sanskrit part of the Triennial Catalogue.

## (c) இலக்குமிவெண்பா.
## ELAKKUMIVEṆBĀ.

Foll. 5a—138a.

A eulogy on Goddess Lakṣmī. The author's name is not given, but he appears to be a Vaiṣṇava. From the colophon it is made out that this work contains more than 218 stanzas.

Contains 136 stanzas.

**Beginning:**

திருவாசல் காப்புத் திறமினென் னெஞ்சென்னு
முருவார்கோ யில்காத் துறைவீர்—மருவாருந்
தாமரைப்பூ மேலிருப்பாள் தண்டுளவோன் மார்புறைவாள்
தூமலர்த்தாள் கண்டு தொழ. (க)

வரமங்கை யோகி மலர்க்கமலப் பொற்றாள்
சிரமங்கை சேர்த்திறைஞ்சல் செய்வேன்—பிரமன்
திருத்தாய் மால் மார்பிலுறை செல்விவாழ் வெல்லாம்
பெருத்தா ளருள்யான் பெற. (உ)

நீலமே கத்துள்மின்போல் நின்றன் றுலகளந்தான்
கோலமார் பிற்றிகழ்பூங் கொம்பனையாய்—ஞாலமெங்குங்
கூவினகாண் கோழிகுயில் கூர்ந்துநுங்கோன் பேர்பிதற்றல்
மேவினகாண் புட்குலம்வெவ் வேறு. (ங)

* * * *

**Colophon:**

பக்தனைச்சார்ந்தகவி அுமுற்றும். மகாலக்ஷ்மி திருவாராதனக்ரமம் கவி 218முற்றும்.

**End:**

நல்லறிவா ளர்க்கினிய நாரணன்மார் பிற்றிகழு
மெல்லியலே வாழ்வுதரு மெய்த்திருவே—சொல்லிவைத்தே
னன்பாற் றெழேனுன்னை யாராதி யேனுனீ
யென்பாற் பராமுகஞ்செய் யேல். (சா)

(கு-பு.)—

இது இலக்குமியின் தோத்திர ரூபமானது. வைணவமதத்தினரியற்றிய தெனத் தெரிகின்றது. செய்யுள் நடை சாதாரணமானது. இந்நூலினிறுதியிலுள்ள வாக்கியத்தால், இதில் வெண்பா இருநூற்றுப் பதினெட்டுக்கு மேலிருக்கவேண்டுமெனத் தோற்றுகிறது. இடையிடையே பல வேடுகளில்லையாதலின் இதிலுள்ள வெண்பாக்கள் 136. நூலாசாரியர் இன்னாரென விளங்கவில்லை.

---

## R. No. 431.

Paper. 11 × 9½ inches. Foll. 316. Lines, 20 in a page. Tamil. Good.

Transcribed in 1920–21 from a MS. of K. Lakṣmīnārāyaṇa Ceṭṭiyār of Pudunagaram, Cochin state.

## கிட்கிந்தாகாண்டம், உரையுடன்.

## KIṬKINDĀKĀṆḌAM WITH COMMENTARY.

The Kiṭkindākāṇḍam of Kambarāmāyaṇa with a commentary which, in some places, is elaborate and in other portions somewhat short. The name of the commentator is not given, but it appears that the commentator's native place is Pudunagaram in Cochin State.

Complete.

**Beginning:**

கிட்கிந்தையா காண்டம்.

(பம்பைப்படலம்.)

நாடியபொருள் கைகூடும் . . . . . கூறுவோர்க்கே.

இங்ஙனம் ஆரணியகாண்டம் ஒருவகையான் முடித்துக் கிட்கிந்தையர் காண்டம் கூறுவான் தொடங்கி முதற் செய்யுளால் கடவுளை வாழ்த்து கின்றார்.

(கலிவிருத்தம்)

மூன்றுரு வெனக்குண மும்மையா முதற்
றோன்றுரு வெவையுமம் முதலை சொல்லுதற்
கேன்றுரு வமைந்தவ ரிடையினின்றவர்
சான்றுரு வுணர்வினுக் குவந்ததாயினார்.

(எ-து) இதனைக் குண மும்மையான் மூன்றுருவென முதற்[றெ] (றோன்று)ருவுமம் முதற் சொல்லுதற்கேன்று அமைந்த வுருவெவையும் இடையினின்றவர் சான்றுரு வுணர்வினுக்கு உவந்ததாயினாரெனக் கூட்டுக.

(இ-ள்) முக்குணத்தின் விகாரப்பா[டலா](ட்டா)லுலகத்திற்கு முன்னே தோன்றிய மூவுருவங்களும், அம் மூவுருவங்களில் முதலாகச் சொல்லுதற் கேற்ற எல்லாவுருவங்களும், முற்கூறிய முக்குணத் தொழில்களின் நடுவாகிய தொழிலின்வழி நின்றொருவருருவங்களே. அவ்வொருவர் தம்புந்திக்கு வந்த அவதாரமாயினா ரென்றவாறு.

எனவே, மும்மூர்த்தியுருவங்களு மற்றுமெல்லா வுருவங்களு மளிக்குந் தொழிற்குத் தலைவராய் நின்ற நாராயணக் கடவுளுருவங்களே; அ[ன்னா](ந்நா) ராயணக்கடவுள் இராமவதாரமாக விச்சையால் வந்தருளினாரென்பதாம்.

படைப்பளிப்பழிப்பென்னுந் தொழில்களை விரும்பிப்பிரமன் விண்டு சிவனென நிற்கின்றவன் நாராயண னொருவனுமேயென்று விண்டு புராணங் கூறிய முறைமைதோன்ற மூன்றுருவென முதற்றோன் றுருவென்று, மந்திராதித்த வித்தை முதலாகிய வேதாந்தங்களினும், பகவத்கீதை யினும் அவனுலகத்திற் கெல்லாம் அந்தர்யாமியென்னு முறைமை தோன்றவுருவமைந்த வெவையுமென்றும், அவனளிக்குந் தொழில்வழி நின்றானென்பது தோன்ற இடைநின்றவரென்றும், அவன் சீவகோடி களுக்கு இன்ப துன்பங்களை வினைவழியாற்றுய்ப்பிப்பதன்றி யாவரிடத்தும் வெறுப்பு விருப்பில்லா னென்பது தோன்றச் சான்றுருவென்றும் அவனிச்சையாலவதரிக்குமென்று புருஷஸூக்தத்தினுங் கீதையினு மோதிய முறைமைதோன்ற உணர்வினுக்கு வந்ததாயினாரென்றுங் கூறியவாறு கண்டு கொள்க.

குணங்களைக் கடந்த விண்டு மூர்த்தியையுங் குணவிகாரப்பாடுடையா னென் றீண்டுரைத்தது, அவனக்குணத்தை யிச்சையாற்கைக்கொண்டத னுலென்றறிக. அவன் குணங்களைக் கடந்தவனென்பதுங் குணத்தை யிச்சை யாற்கைக்கொண்டானென்பதும் நாரதீய முதலிய புராணங்களாலறிக.

இவ்வாறவன் பெருமையைக் கூறவே வாழ்த்தியதாயிற்று.

அவனை வாழ்த்துதலாலிக்காப்பியத்தோடு இச்செய்யுளுங் குளகமாம். இதனுள் மூன்றுரு—மும்மூர்த்தி யுரு. முக்குணம்—சாத்திக, ராசத தாமதம். முதற்றோன்று:ா வென்றது உ[ண] (ம்)மைத் தொகை. இ : டயினின்றவ ரென்று – இராமா மனற்கு(?)ளிடையினின்றவரென்றுமாம்.

இனியங்ஙனங் கடவுளை வாழ்த்திப் பம்பையென்னும் வாவியினது சிறப்பை இருபத்தொரு செய்யுளாற் கூறுகின்றார்.

**End:**

மின்னெடுங் கொண்ட(ல்) தாளின் வீக்கியகழல் கொடார்ப்பக்
கன்னெடுந் தோற்றம்வானோர் கட்புலத் தெல்லைதாவ
அன்னெடுஞ் சிகரகோடிமகேந்திர மண்டந்தாங்கும்
பொன்னெடுந் தூணிற்பாதச் சிலையெனப் பொலியநின்றான்.

(எ—து) தனது பாதத்து வீரக்கழலொடு முழங்கத் தனது தோற்றந் தேவர் கண்ணுக்கு மெட்டாதாக . . . . . . . . . தூணை[வ]வும் மகேந் திர மலை அதற்குப் பாதச் சிலையாகவுந் தோன்றும்படி நின்றா னென்ற வாறு. (உஎ)

மருத்தின்வேக[ண](ன்)மனோ சமன்மாறருப்
பிரித்த விந்திரியன்மதி யின்பதி
விரித்த சீதைதன் சோகவி[னு] [நா]சனன்
அரித்திரட்கிறை தாடொழுவாமரோ. (உஅ)

**Colophon:**

மகேந்திரப்படலம் முற்றும்.

ஆகப்படலம் ௰௬ க்குத் திருவித்தம் ௲௬௬. தர்மபரிபாலன நாராயணன் செட்டியார் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பனவர் நூற்கப்பட்ட இராமா யண கதை விருத்தத்துக்குப் பொருள்விளக்குவதரி தென்று பெரியோர்கள் சொல்லுவதாகிய கதைக்கு: தெரிந்தமாத்திரம் கிட்கிந்தாகாண்டம் ஒரு காண்டத்துக்கு உரை செய்து அதற்கு இலக்கணச்சொல்லு மெழுதவேணு மென்று சொன்னபடியினாலே எழுதி முடிந்தது.

(கு-பு.)—

இது கம்பராமாயண கிட்கிந்தா காண்டத்தின் உரை. இவ்வுரை சில விடங்களில் விரிவாயும், சில விடங்களில் சுருக்கமாகக் கருத்துக்களை விளக்கி யும் எழுதப்பட்டுள்ளது. சிலவிடங்களில் இவ்வுரைகாரர் கூறும் கருத்துக் கள் மிக அழகாயிருக்கின்றன. இவர் பெயர் முதலியன தெரியவில்லை. கொச்சிராஜ்யத்தைச் சார்ந்த புதுநகரமென்பது இவரூராயிருக்கலா மென்று தோற்றுகிறது. இவ்வுரை இந்தப் பிரதியில் கிட்கிந்தாகாண்ட முழு மைக்கும் உளது.

R. No. **432.**

Paper. 11×9½ inches. Foll. 15. Lines, 20 in a page. Tamil. Good.

Transcribed in 1920–21 from a MS. of Malayappiḷḷaikavirāyar of Alwartirunagari, Tinnevelly district.

மாறன்பிள்ளைத்தமிழ்.
MĀṞANPIḶḶAITTAMIḺ.

A kind of poem technically known as Piḷḷaittamiḻ written in praise of Māṟan, also known as Saint Śaṭhakōpa or Nammāḻvār, well-known as the author of Tiruvāymoḻi.

Incomplete.

**Beginning:**

தேனருமகிழ்த் தொடையலு மௌலியுந்திருக்கிளர் குழைக்காதுங்
கானரு மலர்த்திருமுகச் சோதியுங்கயிரவத்துவர்வாயு
மோனமாகிய வடிவமு மார்பமு முத்திரைத் திருக்கையு
ஞானதேசிகன் சரணதாமரையு மென்னயனம் விட்டகலாவே.

*      *      *      *

சுவாமி ஆழ்வார் பிள்ளைத்தமிழ்.

கார்கொண்ட திருமேனிப் பசும்பொருப்பினடுவே
கதிரெறிக்கு மின்போலக் குடியிருக்கு மொருத்தி
தார்கொண்ட மூவுலகுமீந்தித் தழும்பிருந்த மார்பத்
தனிப்பெரு நாயகக் கடவுள் சரணமலர் தொழுவாஞ்
சீர்கொண்ட மணிமாடந்திகழ் குருகூர் நங்கை
திருவயிறு வாழவந்ததிருக்குழவி மாறன்
பார்கொண்ட மறைநூலின் பயன்கொண்டு தமிழ்நூல்
பாடவல்ல பெருமாளைப் பராங்குசனைக் காக்கவே.

**End:**

அம்புலி.

சந்திரபுட்கரணியிடை யென்று நீசேர்கின்ற
தவநிலைக்கருள் செய்தவத்
தம்பிரானைப் பழையவும்பர் நாயகனை மெய்த்
தமிழ்பாடு மவனிவன்கா,
ணிந்திரற் கரியதிகிரிப்பரமரிவனோது
மியலுக்கு மயலாகிவந்
-திந்தப் புளித்திருவிலைக்கொருவராய் நின்ற
தின்ன நீயறியாய் கொலோ,
மந்தரப் புவிவாழ ஞானமுத்திரைகொண்டு
வந்தவதரித்த வொளிகாண்
மறையைப்பிழிந்து திரையமுதொழுகுகவிபாட
(வந்த) பெருமாளிவன்கா,
ணந்தரத்திடையிழிந்தரு குவந்துளமகிழ்ந்
தம்புலீயாடவாவே
யாழ்வார்கள் தம்பிரா னெம்பிரானுடன் மகிழ்ந்
தம்புலீயாடவாவே. (க)

(கு-பு.)—

இது தமிழ்வேதமாகிய திருவாய்மொழியைச் செய்தருளிய நம்மாழ்வார்மீது பாடப்பெற்ற பிள்ளைக்கவி. பிரபந்தவகைகளிலொன்று. பத்துப் பருவங்களையுடையது. இந்தப்பிரதியில் முதல் ஆறுபருவங்களும் ஏழாவது பருவத்தின் முதற்செய்யுளுமேயுள. ஆதலால் அபூர்த்தியாகவுளது. இஃது அச்சிடப்படவில்லை.

---

## R. No. 433.

Paper. 11 × 9½ inches. Foll. 12. Lines, 20 in a page. Tamil. Good.

Transcribed in 1920–21 from a MS. of Vaḍamalainambi Ceṭṭiyār of Pudunagaram, Cochin state.

### நவநீதப்பாட்டியல்.

### NAVANĪTAPPĀṬṬIYAL

A work in verse in Kaṭṭaḷaikalitturai metre, laying down the general poetic conditions to be satisfied in the composition of the Tamil Prabandhas: by Navanītan. The work is divided into three sections, viz., Mudanmoḻi, Seyyuḷmoḻi and Podumoḻi. The work is printed, but in the printed edition only 24 stanzas belonging to Mudanmoḻi are found.

Complete in 102 stanzas.

**Beginning:**

நவநீதப்பாட்டியல்.

கார்கொண்டமேனிக் கறைகொண்ட நேமிக்கமலக்கண்ணன்
பார்கொண்ட பாதத்தையேத்திப் பகருவன்பாட்டியலைத்
தேர்கொண்ட வல்குற்றுடி கொண்டசிற்றிடைச் செந்துவர்வாய்
வார்கொண்ட பூண்முலைவேல் கொண்ட வாள்விழிவாணுதலே. (க)

மங்கலஞ் சொல்லெழுத்தொன்றியதானம் வருமிருபாற்
பொங்கியவுண்டிவருணம் பகுத்திடு நாட்பொருத்தந்
தங்கிய நாற்கதி யெண்கணமென்று தமிழ்தெரிந்தோ
ரிங்கிவைபத்து முதன் மொழியா மென்றியம்பினரே. (உ)

**End:**

இறப்பவுயரவிறப்ப விழிய விசைகளுஞ் செய்யுட்
டிறத்தன யாவையுந் தீதென்றுரைப்பர் செய்யாதொழிந்த
வுறத்துளவாயினுந் தொன்னூன் முறைமை யுறழப்(படு)
திறத்திற் குவளையுங் காவியும் போன்ற நெடுங்கண்ணியே, (௱க)

**Colophon:**

ஈட்டிய வெண்ணெண் கலையோடியலிசை நாடகமுங்
காட்டிய போதக்குறு முனியாதி கலைஞர் கண்ட

பாட்டியலானவை யெல்லாந் தொகுத்துப் பயன்பெறவே
நாட்டிய வேதத்தவனறு நீதநடனென்பவே. (௱௪)

நவநீதப்பாட்டியலெழுதி முடிந்தது.

முற்றும்.

(கு-பு.)—

இது பிரபந்தங்கள் பாடு முறையையும் அவற்றிற்குரிய பொருத்த முதலிய இலக்கணங்களையுந் தெரிவிப்பது. கட்டளைக் கலித்துறையாலாயது. முதன் மொழி, செய்யுள் மொழி, பொது மொழி என மூன்று பகுதியுடையது. இதிலுள்ள கலித்துறைகள் 102 அச்சுப் பிரதியில், இதன் முதற் பிரிவினுள் 24 செய்யுட்களேயுள்ளன. அவற்றிலும் பாடபேதங்கள் மிகவுள. இதனையியற்றியவர் பெயர் நவநீதன் என்பர்.

---

## R. No. 434.

Paper. 11 × 9½ inches. Foll. 27. Lines, 20 in a page. Tamil. Good.

Transcribed in 1920–21 from a MS of Vaḍamalainambi Ceṭṭiyār of Pudunagaram, Cochin state

### கதம்பக்கோவை.
### KADAMBAKKŌVAI.

A collection of 252 stanzas taken from various poems, viz., Tiruvārūrkkōvai, Tirucirrambalakkōvai, Tañjaivāṇakkōvai, Kapparkkōvai, Kūdārkkōvai, Asadikkōvai, Puliyūrkkōvai, etc., most of these Kōvai having been printed. Some stanzas in this MS. contain mistakes and some contain differences in the readings.

**Beginning:**

வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமல (மேல்) வீற்றிருப்பாள்—வெள்ளை
யரியா சனத்திலரசரோ டென்னைச்
சரியா சனத்தில் வைத்த தாய்.

கதம்பக்கோவை.

தேர்கொண்ட காமன் கவிகையும் வேழமுஞ்செஞ்சிலம்பும்
(போர்கொண்ட வம்பு மகுடமுங்) கொண்டொரு புற்றிடத்தே
வேர்கொண்டிருப்பவரா ரூரர்வீதிவிடங்கர் வெ(ற்பிற்)
(கார்கொண்டகாவி) லொரு பசுந்தோகை யென்கண்ணுற்றதே. (க)

திருவாரூர்க்கோவை.

குலைகொண்ட . . . வாபுலியூரிற் ருவடத்தே நறைவெ . . . .
(சிலை)கொண்டுவாளிகொண்டம் போருகங்கொண்டு தேனுங்கொண்டு
கலைகொண்டு மேய்கொண்டு செங்காந்தள்கொண்டு கமுகங்கொண்டு
மலைகொண்டு வள்ளைகொண் டின்பான கொம்பொன்று வாழ்கின்றதே. (உ)

**End :**

முகத்தைத்துடைத்துப் பெருமூச்செறிந்து முலை[களு](க்கழு)து
வ[குத்தை](யிற்றைக்) குழைத்து வருமையனே மயில்வாகனனே[ர[(ன)
செகத்திற் றுதிக்கின்ற தென்னவராயனைச் சேவகனே
அகத்துக் கழைத்துவந்தாற் றருவேன் முலையாரமுதே. (உ௫௧)

சதிராக்கிநந்தி பாமனைக்கூடிய தையலரை
யெதிராக்கி யென்னை யிளந்தலையாக்கி யிருள்குழலை
அதிராக்கி மேனியழுக்காக்கிப் பின்னுமங்காடிக்கிட்ட
பதராக்கி யென்னையும் பற்றாசை நீக்கியபாலகனே. (உ௫உ)

(கு-பு.)—

இதில் திருவாரூர்க் கோவை, திருச்சிற்றம்பலக்கோவை, தஞ்சைவாணன் கோவை, கப்பற்கோவை, கூடற்கோவை, அசதிக்கோவை, புலியூர்க்கோவை முதலிய பல கோவைகளிலிருந்து தொகுக்கப்பட்ட 252 செய்யுள்களுள. இக் கோவைகளுட் பெரும்பாலன அச்சிடப் பெறுதன. இப்பிரதியிலுள்ள செய்யுட்களுட் சில பிழையுள்ளனவாயும், சில பிரதிபேதமுள்ளனவாயும் இருக்கின்றன. இறுதியிற் சில செய்யுட்கள் கோவைச் செய்யுளல்லாத தனிப் பாடல்களாகத் தோற்றுகின்றன. அவை தாழ்ந்த நடையாவாயவை.

---

## R. No. 435.

Paper. 11 × 9½ inches. Foll. 75. Lines, 20 in a page. Tamil. Good.

Transcribed in 1920–21 from a MS. of Malayappiḷḷai Kavirayār of Ālwartirunagari, Tinnevelly district.

### இறையனாரகப்பொருளுதாரணச்செய்யுட்கள்.

### IṚAIYANĀRAHAPPORUḶUDĀRAṆACCEYYUṬKAḶ.

Illustrative stanzas to the various themes or topics dealt with in the Ahapporuḷ of Iṛaiyanār, which work is described under No. 40 of D.C.T. MSS., Vol. I. Most of these stanzas are taken from Tamil classical works and a list of these works are given at the end after the extracts.

Imperfect.

இறையனாரகப்பொரு[ள்த்து](ட்டு)றைக்குச் சங்கச்செய்யுளாக
வுதாரணமெழுதியது.

உரியவேணு வனத்தெல்ல ? வெளியினூடு தோன்றி
யுலகமெலாம் போற்றுங், கரியமாணிக்க மல்லாத
வேய்முத்த[ர]ங்கையினூலுந் தொடோமுறுகண்ணதாய்
விரியுமொட்டுமுத்துளன குறமான்முலைவிலைக்கு
நேரொர(க்)குமோரணபனே விடை, யரியராவின்மடிக்கீழ்க்
கிடந்தபொன்மாணிக்கந்தரில் வாங்குவாரி(ல்)லையே.

* * * *

பூமருக்கண் ணிணை(வண்டாப் புணர்)மென் முலையரும்பாத்
தேமரு செவ்வாய் தளிரா(ச்) செருச்சென்னிலந்தைவென்ற
மாமருதா(னை யெங்கோன்வை)யையார் பொழிலேர்மணந்த
காமரு பூங்கொடி கண்டே களித்த வெங்கண்ணிணையே.

(பாண்டிக்கோவை).

*　　*　　*　　*

தொடிவானரம(ங்)கை யன்றிமைக்குங்கண்கள் தோயுதிலத்
தடிவானரந்தமலரும் புலருமயன்தலையைத்
தடிவானரன் . . . . . தாழ்சடையோன் றில்லைப்பூசல்வல்லிக்
கொடிவானரம்புரியும் பொழில்வாய்ந்த கோல்வளையே.

(தில்லையந்தாதி).

**End**:

நாளைவரகுணர்கோ ஞங்கையிலே தங்கலா
மீ[ழு](ளு) மமரும் விடிந்துபோ—நீளமுமோ
ரம்பிட்டெயுந்தூரமிவ்வூ ரயில்வே[ல](ற்கட்)
கொம்புக்குங்காலர்றக்கொண்டு.　　(பழம்பாட்டு).

*　　*　　*　　*

நீயுமிவளுமின்றேசென்று சேர்தி(ர்)நெல்வேலியொன்னார்
தேயும்படிசெற்றதென்னவன் (றென்)புனனாட்டிளையோர்
வாயுமுகமுமலர்ந்த கமலமணி(த்தடத்துப்)
[பே]பா[ய](யு)ங்கயலவர்கண்போற் பிறழும்பழனங்களே.

(பாண்டிக்கோவை).

வில்லார்நுதலியுநீயு மின்றேசென்றுமே[ா]வுதிரு
நெல் . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .

*　　*　　*　　*

துணைவனெனும்பெயர் : தோழனுங் கணவனுந்
துணைவனென்றாகும் . . . . . .

படையின் பெயர் : தாரே தண்டம் அனீகம் அநீகினி, தானை பதாதி பதாகினி, யூபம், பாணியதிகம் பாடி பகுதி.

**Colophon** :

இறையனாரகப்பொருள் துறைக்குச்
சங்கச் செய்யுளாக வுதாரணமாக
வெழுதியது முற்றும்.

முன்பின் சோர்ந்துபோயிருப்பதினாலே விசாரித்
தெழுதிவைக்க வேண்டியது.

(கு-பு.)

இதில் இறையனாரகப்பொருட்டுறைகளுக் கிலக்கியமாகக் காட்டப்பெற்றுள்ள பழைய செய்யுட்கள் சுமார் 400 க்கு மேல் உள்ளன. இவை பல கோவைகளினின்றும், எட்டுத் தொகையுட் சிலவற்றினின்றும் வேறு சில பழைய நூல்களிலிருந்தும் தொகுக்கப்பெற்றவை. தனிப்பாடல்களும் சிலவுள. இவற்றைத் தொகுத்தவின்னாரென்றும், அவர் கால முதலியனவும் புலப்படவில்லை. பிரதியில் எழுத்துப் பிழைகள் அதிகம். இடையிடையே விடப்பட்டுமுள்ளது.

இதில் வந்துள்ள நூல்களின் பெயர்கள் வருமாறு—

(1) திருக்கோவை.
(2) பாண்டிக்கோவை.
(3) களவித்தெளிவு.
(4) களவிமாலை.
(5) குறுந்தொகை.
(6) பொருளியல்.
(7) சிற்[ெ]றட்டகம்.
(8) பலசந்தமாலை.
(9) அகத்திணை.
(10) களவிவிளக்கம்.
(11) நற்றிணை.
(12) நெடுந்தொகை (அகநானூறு).
(13) கண்டனலங்காரம்
(14) கோயிலந்தாதி.
(15) வங்கர்கோவை.
(16) நந்திக்கலம்பகம்.
(17) சிலப்பதிகாரம்.
(18) ஐங்குறுநூறு
(19) ஐந்திணை.
(20) நறையூரந்தாதி.
(21) வெண்பாமாலை.
(22) மழவைஎழுபது.

---

## R. No. 436.

Paper. 11 × 9½ inches. Foll. 144. Lines 20 in a page. Tamil. Good.

Transcribed in 1920–21 from a MS. of M.R.Ry. Vaḍamalainambi Ceṭṭiyār Avargaḷ of Pudunagaram, Malabar.

**கணக்கதிகாரம், உரையுடன்.**

KAṆAKKADIKĀRAM WITH COMMENTARY.

Same work as that described under R. No. 199(*c*) ante.

Complete.

(கு-பு.)—

இந்நூல் மூவருடத்துக் காட்லாக்கின் 199(a) நம்பரில் வந்துள்ளதே. ஆயினும், இந்தப் பிரதி அதனினும் விரிவாகவுள்ளது. இது பூர்ணமாகவிருக்கிறது.

---

## R. No. 437.

Paper. 11 × 9½ inches. Foll. 56. Lines, 20 in a page. Tamil. Good.

Transcribed in 1920–21 from a MS. of Lakṣminārāyaṇa Ceṭṭiyār, Puduagaram, Malabar.

## செய்யுளியல் மூலமும், உரையும்.

## SEYYUḶYIAL WITH COMMENTARY.

The work forms the 4th part of the Poruḷadikāram of the Ilakkaṇaviḷakkam which is a work on Tamil grammar. By Vaidyanātha-dēśikar who also wrote the commentary under notice. The author lived in Tiruvalur about more than 250 years ago. Although the work is printed, there are one or two additional Sūtras in this manuscript in addition to variations in the commentary.

Contains Sūtras 30 complete with commentary, the 31st being incomplete.

**Beginning :**

*சுயம்பிரகாசச் சோதியை வணங்கி*
*யியம்புவன் செய்யுளி யலைவிரித்தே.*

*என்பது சூத்திரம். இவ்வோத்துச் செய்யுளதியியல்புணர்த்திற்றாகலாற் செய்யுளியலென்னும் பெயர்த்து. இதனுளித்தலைச் சூத்திரம், வழிபடு தெய்வவணக்கமு மதனாற் கூறப்படு பொருளு முணர்த்துவதாகிய சிறப்புப்பாயிரங் கூறுகின்றது ; "வணக்கமதிகாரமென் றிரண்டுஞ் சொலச், சிறப்பென்னும் பாயிரமாம்" எ-ம், " தெய்வவணக்கமுஞ் செயப்படுபொருளு மெய்தவுரைப்பது தற்சிறப்பாகும் " எ-ம் கூறுபவாகலின்.*

*(இதன்பொருள்)—இயல்பாகத்தானே சோதிப்பிரகாச வடிவா யெழுந்தருளியிருக்கின்ற பொருளைத் தொழுதியான் செய்யுளதிலக்கணத்தை விரித்துக் கூறுவே னென்றவாறு.*

*விரித்தே யென்றதீண்டீற்றசையேகாரம் '(தேற்றம் வினாவெண் பிரிநிலை யெதிர்மறை, யீற்றசையெனவாறே காரம்மே) ' என்புவாகலின்.* (க)

*செய்யுளென்பது தெரிவுறக் கிளப்பிற்*
*பல்வகைத் தாதுவி னுயிர்க் குடல்போற்பல*
*சொல்லாற் பொருட்கிடனாக வுணர்வினின்*
*வல்லோரணிபெறச் செய்வன செய்யு*
*ளென்றுகூறிய வியல்பிற்றாகி*
*யெழுத்தசை சீர்தளையடி தொடையென்ற*
*மூவிரண் டுறுப்பு மேவரச் சிவணிப்*
*பாவுமினமு மெனவிரு பாற்றே.*

*இது, மேலியம்புவனென்ற செய்யுளதிலக்கணத்திற் செய்யுட்குப் பொதுவிதியும், அஃதித்துணையுறுப்பிற்றாயித் துணைத்தாமென்பதூஉங் கூறுகின்றது.*

**End :**

*சுரிதகமிடையிடைவந்த கொச்சகச் செய்யுளும் வெண்பாவினோடு மாசிரியத்திஞேடு மயங்கிவந்த மயங்கிசைக் கொச்சகச் செய்யுளும் வந்துழிக் காண்க.*

*இன்னும், மரபென்ற மிகையானே, தரவொரு போகு முதலாகவுடையன வெல்லா மதனாற் பெயர் கொடுத்துக் கொச்சக வொருபோகென்று வழங்கப்படும். " தரவின்றாகித் தாழிசை பெற்றுந்,தாழிசையின்றித் தரவுடைத்தாகியு மெண்ணிடையிட்டுச் சின்னங்குன்றியு, மடுக்கியலின்றி யடிநிமிர்ந்தொழுகி*

யும், யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது கொச்சக வொரு போகாகுமென்ப " என்றாசிரியர் தொல்காப்பியனாரும். " கூறிய வுறுப் பிற் குறைபாடின்றித், தேறிவிகற்பிற் றேவபாணியுந், தரவே குறையினுந் தாழிசை குறையினு, மிருவகை முத்திறத்தெண்ணே நீங்கினு, மொரு போ கென்ப வுணர்ந்திசினோரே " என நற்றத்தனாரும் பிறருங் கூறுபவாகலின் அவற்றின் இலக்கியமும் பிறவும் யாப்பருங் கலவிருத்தியுட் கண்டுகொள்க.

அடியெனைத்தாகியு மொத்துவந்தளவினிற்
கடையடி மிகுவது . . . . . . . . .

(கு-பு.)—

இது இலக்கண விளக்க மென்னுந் தமிழ் இலக்கண நூலின் ஒரு பகுதி யாகிய செய்யுளியலாகும். இந்நூல் பிரசித்தமானது ; அச்சிடப்பட்டிருக்கி றது. எனினும் இந்தப் பிரதியில் இரண்டொரு சூத்திரம் அதிகமாகவும், உரையில இடையிடையே சில பாடபேதங்களுமுள்ளன. இவ்வியலின் சூத்தி ரம் ருக. இந்தப் பிரதியில் ௩0 சூத்திரங்கள் முழுதும் உரையுடனும் ௩௧- வது சூத்திரம் அபூர்த்தியாகவுமுள்ளன. ஆதலால் இது முற்றுப் பெற விலலை. இந்நூல் மூலம், உரையாகிய விரண்டையுஞ் செய்தவர், சுமார் 250 வருஷங்களுக்கு முன் திருவாரூரிலிருந்த வைத்தியநாத தேசிகரென்ப வர்.

---

## R. No 438.

Paper. 11 × 9½ inches. Foll. 54. Lines, 20 in a page. Tamil. Good.

Transcribed in 1920–21 from a MS. of Vaḍamalanambi Ceṭṭiyār of Pudunagaram, Malabar.

### ஹோரா சாஸ்திரம்.

### HORĀŚĀSTRAM.

A rendering in Tamil of the Sanskrit Brahatjātaka of Varāhamihira : by Iḷiṅga, a trader by birth, whose native place was Pudunagaram in the Malayalam country.

Complete.

**Beginning :**

நன்றாக.

வராகரோரை சாஸ்திரம்.

பூங்கொன்றை மாலேவேய்ந்த புண்ணிய மூர்த்தி தந்த
தூங்கலின் வதனப்பிள்ளை சோமனைக் கோடென்றெண்ணி
யாங்கதை(ப்) புழைக்கைபற்றி யன்புறவிணைத்து நோக்குந்
தேங்கமழ் களிற்றின் செய்ய சேவடி சென்னிவைப்பாம்.
ஸ்ரீவெங்கடாசலபதி ரெங்கராயர் திருவடித்தாளே சரணம். (க)
உலகெலாம் பூத்துக் காய்த்து நித்தலு முடையோனாகி
நிலவுறு மூ[ற](ர்த்) தியாகிப் பிறப்பிறப்பிலனாய் நின்ற
வலகறு சோதியாகி யனுமுத லெவையுமாகிக்
கலைகளின் முடிவாய் நின்ற கதிரினைச் சிந்தைசெய்வாம் (உ)

* * * *

இசைபிரதம மாமோரைக் கிராசியாதி பனேயாகும்
அசைவிலா விரண்டா மோரைக்கில(ா)பேசனதிபனாகு[ம்]
முசிவறு திரேக்காணே சன்முன்னம் வியேசனந்த[ம]
மிசையுறு மிலாபமாள்வோன் அதிபனாமென விளம்பே. (கஉ)

**End:**

குருவே துணை.

மடுவிடந்தனிற் புயங்கஞ் சுற்றிய வடிவனாகிக்
கடிய வத்திரமில்லாதே வனத்தினிற் கள்வர்தன்னாற்
படியினிலங்கி தன்னாற் பாவகமுறு மொருத்தன்
கடிகமழ் குழலாய் மீனங்கடைத் திரேக்காணமாமே.

**Colophon:**

மாவியன் மறைவலோர் முன்வகுத்திடும் வடநூல்தன்னைத்
தேவர்க்குங் காலமோர்வான் செப்பினன் வராகனென்போன்
நாவலன் வணிகர்தம்மில் நல்லவனரு ளிலிங்கன்
ரூவிய புவியின்மீதே தமிழினிற் சாற்றினானே. (ஙஎ)

*　　　*　　　*　　　*

ஆக விவ்வத்தியாய மறைந்தன விருபத்தைந்தும்
ஓலைகயாலிந்நூல் தன்னை யுணர்ந்துல கோர்க்குணர்த்திற்
போகமா முலகுதன்னிற் கதிரெனப் புகழின்வாழ்ந்து
ஏகமாய்ப் பிரமமாகி யின்ப முற்றிடுவரன்றே. (சயக)

ஆக அத்தியாயம் உயடுக்கு கூடிய விருத்தம், சா.

சகரவாண் . . னூற்றிற் சார்ந்திடு மைம்பத்தைந்தின்
பகர்தரு தைப்பூசத்திற் பனையுறுந் தாமனாட்டில்
புகல்தரு புத்தூர்தன்னிற் புகழுடை நல்லவன்றன்
மகவெனு மிலிங்கனானை வகுத்தரங் கேற்றினானே.

The scribe adds:—

விகுருதி௵ மாசி௴ யஉ தத்தமங்கலத்திலிருக்கும் சைவம், குழந்தை வேலாயுதம் வாத்தியார் மகன் சாமிநாதன், புதுநகரத்திலிருக்கும் இராமன் செட்டியாரவர்களுக்கு ஓரா சாஸ்திரம் எழுதி நிறைந்தது. சம்பூர்ணம்.

நீடூழிவாழ்கவும்.

அத்தியாய அட்டவணை.

| விருத்தம். | | விருத்தம். | |
|---|---|---|---|
| (1) இராசி பேதம் .. | (உ0) | (13) சந்திர யோகம் .. | (கூ) |
| (2) கிரக பேதம் .. | (உக) | (14) துவிக்கிரக யோகம் .. | (ரு) |
| (3) வியோனி சென்மம் .. | (அ) | (15) பிரவிருத்தி யோகம் .. | (ச) |
| (4) நிஷேகம் .. | (உஉ) | (16) ராசி சீலம் .. | (சஎ) |
| (5) சென்மம் .. | (உசா) | (17) திருட்டி பலம் .. | (கூ) |
| (6) சத்தியோ மரணம் .. | (கங) | (18) பாவ பலம் .. | (கக) |
| (7) ஆயுத்தாயம் .. | (கங) | (19) ஷட் வர்க்கம் .. | (சா) |
| (8) [தி](த)சாபலம் .. | (உங) | (20) காரக பலம் .. | (சா) |
| (9) அஷ்டவர்க்கம் .. | (அ) | (21) அரிட்ட யோகம் .. | (கஎ) |
| (10) கன்ம சீவன லாபம் .. | (ச) | (22) ஸ்திரீ சாதகம் .. | (கசா) |
| (11) இராச யோகம் .. | (உ0) | (23) துன்மரண யோகம் .. | (கரு) |
| (12) நாபச யோகம் .. | (ககூ) | (24) நட்ட சாதகம் .. | (கஎ) |
| | | (25) திரேக்காண சொரூபம். | (ச0) |

அட்டவணை முற்றும்

(த-பு.)

இது வடமொழியில் வராகமிசிரரென்பவரால் செய்யப்பட்டுள்ள பிருகத் ஜாதகமென்னும் சோதிட நூலின் மொழிபெயர்ப்பாகவுள்ளது. 25 அத்தியாயங்களாகப் பகுக்கப்பட்ட 400 பாடல்களையுடையது. சாதாரண நடையாலாயது. இதனைத் தமிழில் இயற்றியவர் வணிக வகுப்பினராகிய இலிங்கனென்பவர். இவரூர் மலையாள தேயத்திலுள்ள புதுநகரம் என்பது. இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது. இதன் பின்னர் 5 ஏடுகளில் சூரியன் முதலிய கிரகங்களின் தசை முதலியவை எழுதப்பட்டுள்ளன.'

---

## R. No. 439.

Paper. 10½ × 9¼ inches. Foll. 48. Lines, 20 in a page. Tamil. Good.

Transcribed in 1920–21 from a MS. of M.R.Ry. A. M. Malayappiḷḷai Kavirāyar Avargaḷ of Alwartirunagari, Tinnevelly district.

### (a) மாறன் திருவவதாரச் சரிதை. MĀṞANTIRUVAVATĀRACCARITAI.

Foll. 1—14a. Fol. 14b is left blank.

A poem describing the birth and greatness of Nammāḻvār or Māṟan. Some stanzas are of the nature of Piḷḷaittamil.

**Beginning:**

மாறன் திருவவதாரச் சரிதை.

(மி)ன்னனங் குறுநுண் (ணிடை)டக்கணங் களிக்கும்
வெற்பெனப் பணைமுலைத்திரை சூழ்
மன்னனங் கெனவே பொறைமலி கயற்
கண்மதி நுதற்திரு மடந்தையொடு
மின்னணங்களித்தில் வறத்தினி [று](து)றை நா
விண்டையாசனத்து வீற்றிருக்கும்
பொன்னனங் குவந்து குடிபுகுந் தகலாப்
பொறிகுலாந் துளப மார்புடையோன். (க)

எழுவகைத் தோற்றத் துலப்பில் பல்வடிவத்
திழைத்தலும் தொலைதரு நெறித்தாய்ப்
பழுதறு திறத்திம் மனுகுலம் படைத்தும்
படுகொலைக் கணிச்சிவாய்ப் படுவான்
கழு மலுற்றனராய்ப் புலன வித்தறியார்
கழிந்த பேரின்ப வாழ் வளிக்கும்
முழுநிலத்தடை வாரொரு பதாம் [வி](பி)றப்பின்
முன்னுதற் குளத்தினிற் குறித்தான். (உ)

வேறு.

பார்வைப் பறவால் வனட்புறவு
படுக்குமவர் பொற்புதர் மறைந்து
வார்வைத்திள மானினை வளைப்பான்
மர்ன்கொண்டே[ன்] செல்கு[ன](ந)ர் பேர்நூன்

போர்வைப் படிவத்திரு நிலத்துள்
புலவர்க் கரசாய் வருவலெனுச்
சேர்வைத் தமருளிருவரை முன்
செப்புந் திறத்தின் விடுத்தானே. (௩)

வாளுர் விழிப் பூ[க்](ம)கள் கொழுநன்
வரத்தின் விடுத்த விருவர்களும்
வேளுர் பசுந்தென் றவின் குழவி
விரைமென் மலர்த்தா தளோர்து மைந்தர்
தோளுர்ந்தவர் மங்கையர் கொங்கைச்
சுவட்டிற் றவழ்ந்துாடலே யுணர்த்துங்
கோளுநரினும் வண்டமிழ் கொழிக்கும்
குருகூரினும் வந்துதித்தாரே. (௪)

திருமால் விடையினிலத் துதித்த
திருத்தொண்டனரின் திருப்புளியாய்
வருமாதர வொன்றிய|சேடன்
மலர்க் கணுங்காத வதரிப்பப்
பெருதான் மறை யந்தணர் குலத்துட்
பிறந்தே மதுரகவி யெனப்பேர்
தருமாற கிலதலம் வலம்வந்
தனனுங்கலுழன் றிரிதருமே. (௫)

* * * *

மும்மையாமுகம் போய்க் கலியுக மடிக்கொள்
முப்ப . . தொடு பன்மூன்று நாட்
செம்மையார் மதிவைகாசி பன்னிரண்டாந்
திருவிசாகத் தினிவசுரர்
தம்மையாள் குரவன் கிழமையிற் கடகந்
தழைந்தொளி சிறந்த பூரணையில்,
எம்மையாண்டருளு முதல்வனைப் புதல்வ
னெனத் திருந்திழை கருவுயிர்த்தாள். (௮)

* * * *

திங்க ளிரண்டுபுகுந் தெய்வத் தனிச்சுடரை
நங்கை திருவயிற்றில் வந்துதித்த நன்மணியை
யங்கண் வழுதிவள நாடர்குலத் தாரமுதா
மெங்கள் பெருமானை யெம்பெருமான் காக்கவே
எனோர்க்கும் பெம்மானை யெம்பெருமான் காக்கவே. (௬௮)

End:

முன்னே முனிவரென மூவுலகத் துள்ளமைந்தோர்
பின்னோர்வரின் மின்மினித்தா நிறை மதியந்
தன்னேர் வருவதெனத் தத்துவஞானந் தழைந்த
பொன்னே மணியேசெம் பொற்றேட்டி வாடுகவே
போர்கழியார் வாழ்வே செம் பொற்றேட்டி வாடுகவே. (௮௨)

எழுதிரைப் பாருள்ளா ரெமக்கிடு(ம்) (பேர்கே)ட்கும்
பொழுதகனுளுள்ளே பொருமிய துன்பத்தால்—
அழுதகண்ணீர் மாற்ற வருள்புரிந்தே வந்த
வழுதி வளநாடா மணித் தொட்டி லாடுகவே
வண்குரு கூர்மாறு மணித் தொட்டி லாடுகவே.

**Colophon:**

ஆழ்வார் திருவவதாரச் சருக்கம் முற்றும்.

திருஞானமுத்திரை துணை. பெரிய திருவடி, திருமேனிக் கவிராயர் வ[ங்கிஷ](ம்ச) பூஜாபலரான இரத்தினகவிராய குரவேநம:. கூஎ௰௫ [அற்](ஐப்)பசி ௴ ௧௩௳ ஆதித்த வாரமும் சதய நட்சத்திரமும் பெற்ற சுபதினத்தில் எழுதி முடிந்தது.

திருஞானமுத்திரை தரித்த கைத்தாமரைச் செண்பகக் காரி மாறன் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

கருடாய நம:.

மாறன் திருவவதாரச் சரிதை முற்றும்.

(கு-பு.)

இந்நூல், மாறன் என்னும் சடகோபரது திருவவதாரச் சிறப்பினை யுணர்த்துவது. பிள்ளைத் தமிழ் போன்று, செங்கீரை, தாலாட்டு, சப்பாணி முதலியன வமையப்பாடப்பட்டுள்ள எண்பத்து மூன்று செய்யுட்களையுடையது. நடை நன்றாகவிருக்கிறது. இயற்றியவர், திருக்குருகூர்த் திருமேனிக் கவிராயர் வம்சத்தினராகிய இரத்தின கவிராயரெனத் தோற்றுகிறது. இந்தப் பிரதியில் இது முற்றுமிருக்கிறது.

---

## (b) கொக்கோகம்.

## KOKKŌKAM.

Foll. 15*a*—29*b*. Fol. 30 is left blank.

A rendering in Tamil of the Ratirahasya of Kōkkōka Kavi.

Incomplete.

**Beginning:**

வெண்பா.

ஏடு. 122.

கன்னலன்றி வேம்புநுகர் காமத் துரோகிகள்போல்
பின்னைமற்றோர் தெய்வத்தைப் பேசேனே—யின்னமின்னஞ்
சாற்றுவதுங் காமகலை சாதிப்ப துங்காணம்
போற்றுவதுங் காமனடிப் போது.

குருபாதந் துணை.

விருத்தம்.

திருமலி கரும்புவென்றிச் சிலையினுலுலக மெல்லாம்
பொருது செங்கோல் நடத்தும் புகழ்புனையேக வீரன்
விரிகடற் பிறந்ததிங்கள் வெண்குடை நிழலில்வைகும்
மருமலி மலர்க்கைவாளி மைந்தனைச் சிந்தைசெய்வாம்.

* * * *

தேரிளந் தென்றலாகச் செழுங்குடை மதியமாகத்
தூரியங் கடல்களாகச் சொற்குடை மதங்கராக
நாரியர் சேனையாக நறைவண்டு விடுதூதாகப்
பாரினில் விசயஞ்செய்யும் படைமதன் சரணம்போற்றி.

கடவுள் வாழ்த்து முற்றும்.

மாலின்புதல்வனிரதியுடன் மணக்குங்காலே யவனியற்றும்
ஆலிங்கனங்கள் நகக்குறிக ளருந்தாடனங்கள் சும்பனங்க
ளேலுங்கரணம் பற்குறிகள் முதலாமிவற்றின் விளையின்பம்
ஞானந் தன்னிலாடவ[ற்](ர்க்)கு நீங்காதென்றும் நண்ணுகவே.

* * * *

வரலாறு.

எல்லாவுலகும் படைத்த விதியயற்றுந் தருமம் பொருளின்பம்
வல்லோருணரச் சொன்னவற்றுள் மற்றையிரண்டும் பிறர் செய்தார்
நல்லா நந்தியின்ப நூல் ஞாலமெடுக்கவது சுருக்கிச்
சொல்லாரி ய[ற்றுவீ](த்தா)(ை)ரஞ் ஞூறத்தியாயம் பெறச் சொன்னான்.

பின்னரதனை முறை முறையே சுருக்கியுரைத்த பெரியோர்கள்
மன்னுஞ் சுவேத கேதுவொடு மருவுதவத்துப் பாஞ்சாலர்
சொன்னவதனை யெழுவகையாய்த் தொகுத்தா ரெழுவரதைத்திரட்டிப்
பன்னியுரைத்தான் பெருந்தவத்துப் பழிப்பில் வாற்சாயனப்பகவான்.

இவர்கள் முதனூலுரைத்த தெலாமெவர்க்கும் விளங்காதிது விளங்க
வுவரி யுலகத்துரைத்தியென வயினதத்த னுரைத்திடலும்
கவினுருவக்குங் கொக்கோக னென்னும் வடநூற் கவிராசன்
அவனிமுழுதும் திலகற்க வநங்காகமத்தை வகுத்துரைத்தான்.

(என்பது) உலகமெல்லாம் படைத்த ஆதிப்பிரமன்
அறம் பொருளின்பமென்று மூன்றுவித முண்டாக்கி
யிதனாலே வீடு பெறும்படிக்கு அருளிச்செய்தார்.

* * * *

இது பூவுலகத்திலெல்லாருக்கும் விளங்கும் பொருட்டாக வயினதத்தர் முன்னிலையாய்க் கொக்கோகர் வடமொழியிற் சுருக்கிச் சொல்லுகையால் கொக்கோக மென்னும் பெயராயிற்று.

இது[முன்] மூன்று பாட்டும் வரலாறு முற்றும்.

* * * *

பண்டுவாற் சாயன . . . . . . . முனிவர் கொக்கோகர்
கண்டாரியத்தாற் குறித்துரைத்த கலைஞானத்தைத் தமிழ் வல்லோர்
கொண்டாதரிக்க வியற்றமிழாற் கூறியிட்டோர் தொன்மையதா
யுண்டாம் பொருளே யுரைத்ததல்லால் புதிதாயொன்றுரைத்திலமால்.

எ-து.-இந்நூல், வாற்சாயன பகவான், கொக்கோகன் இவர்கள் வடநூலாற் சொன்னபிரகாரம், தமிழ் நாட்டிற் பாண்டியன் மரபில் வரதுங்க ராமன் தமிழ் விருத்தமாக்கிக் கொக்கோகமென்னும் பெயரினால் அத்தியாயமாகச் செய்தானென்றவாறு.

*  *  *  *

இந்த நூலின்படி பல சமயத்தாரும் பொதுவாகிய இல்வாழ்க்கையி னின்று வழங்கி . . . மவ[ற்](ர்)[தனை](துணை)யாய் நரகத்தையுங்கடந்து இகத்திலே சுகத்தையுடைந்திருந்து அந்தியத்தில் பரத்தையு[ய][ம]டைவர் என்றவாறு.

முற்றும்.

கொக்கோகத்தின் பிற்பகுதி.

களித்திடுமிளமை தாடனத்தாலே கன்றிய விதயம் பற்குறிகள்
நெளித்திடும் பிறைபோலுகிர் வடுவணியானிறைந்த சிங்காரமுமுடைய
துளித்தலே மேகக்குழலன்னார் பயிற்சி சுபாவ முற்றறிந்திலனேனும்
அளித்திடுங்கலவிக் குச் சமாய் விடாமல ணைவனேலவன் வசமாவார்.

**End:**

மங்குலைப்போலிருண்மலி கூந்தலா
விங்கிதக்கலவியிவிதத்தபற்கு(றி)
. . . . . . பலசாற்றினேமினி
யங்குலி சுரதமென்ற றையப்பட்டதே.

எ-து. பெண்களை அநுபவிக்கிற கலவிக்கு[யி](இ)தமாகியபற்குறி . . . . . . . . . சொன்னோம். இனிமேல் விரற் புணர்ச்சியின் விதம் சொல்லுவோமென்றவாறு.

**Colophon:**

அஞ்சா மத்தியாயம் முற்றும்.

கொக்கோகத்தின் பிற்பகுதி முற்றும்.

(கு-பு.)—

இந்நூல், வட மொழியில் கோக்கோகரென்னுங் கவி இயற்றியுள்ள ரதி ரஹஸ்யமென்னும் காம சாஸ்திரத்தின் மொழிபெயர்ப் பாகும்.

இந்தப் பிரதியில், கடவுள் வாழ்த்து, நூல்வரலாறு, நூற்பயன், சுரதாரம்பம், புறத்தொழில் ஆகிய இவைகளேயுள்ளன. ஆதலின் இது முற்றுப் பெற வில்லை.

---

## (c) பிரபந்தமரபியல்.

## PRABANDHAMARABIYAL.

Foll. 31*a*—36*a*. Fol. 36 *b* is left blank.

A work on the distinguishing peculiarities and characteristics of the 96 varieties of Tamil Prabandhas. The name of the author is not known.

Contains the Seyyuḷ Ilakkaṇam.

**Beginning:**

வானவரேத்து மறையோர் முதலிய
மக்களின்னோர்க்குத் தக்கதன்மையின்
பிள்ளைக்கவிமுதற் புராணமீறாத்
தொண்ணூ(ற்றாறு) தொகையதான
முற்பகரியன் முன்னுறப்பாடும்
பிரபந்தமரபியலது பிரபந்த மரபியலே. (க)

செறிகொலை நீக்கித் தெய்வங்கா . .
. . . . . . . .
எனத் தொகைவரையு மிசைவகுப்பகவல்
விருத்தந்தன்னால் வினவுமுறை காப்புச்
சாற்றுசெங்கீரை தால்-சப்பாணி
வழங்கு . . . . . . . வையம்புலி
சிறுபறைசிற்றில் சிறுதேர்ப்பத்தும்
ஈற்றின் மூன்றொழித் தேந்திழையார்தமக்
குறுகழங்கம்மானை யூசல் . . . . .
மூன்று முதலிருபத் தொன்றனுளொற்றைப்
பெறுமதி கொளலாம் பிள்ளைக்கவியே. (உ)

* * * *

நூறுதேவர் தொண்ணூற்றைந்து
பார்ப்பார்க்கரசர் தொண்ணூறமைச்சர்க்
கெழுபஃதைம்பான் வைசியர்க் காறைந்து
சூத்திரற் . . . . . . . . யல்புணர்ந்தோரே. . . . . (௩)

**End:**

கொள்ளான்பனுவலைக் கொள்வோன்றனக்குப்
பெயர்முதலவற்றைப் . . . வன்றிருவிவன்பாலடையு

* * * *

சான்றோர்விதித்த தன்மையின்வழு
. . . . . . . . . பிணிற்[க்]கேட்கச்
செல்வமுஞ்சீர்த்தியுஞ் சிறக்கும்வாணாள்
இருமகப்பேறொடு தருமமுடைத்தாய்
மனத்துயர்தே[ஞ](நா)யி . . . . .
. . . . . டுக்குமக்கவி கேட்கிலச்
செல்வமகலுந் தீராநோயுறுஞ்
சுற்றமும்புக[ழு](மு)ஞ்சூனியமாகுங்
காலமிருந்துங் கடு . . . .
. . . . . . . . சுரழிகெனிற்றல்
பாதிப்பலன்கவி சாற்றினவர்க்கே. (௩௫)

**Colophon:**

பிரபந்தமரபியல்பு மூலபாட முற்றும்.

ஆக வியல் பு-ரு. பாயிர . . . . . . செய்யுளியல்பு மூலபாடம் முற்றும். முருகனே தெய்வம்.

(கு-பு.)—

இது, தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களின் இலக்கணம் இன்னதென விளக்குவது. இந்தப் பிரதியில் செய்யுளிலக்கண மாத்திரம் உள்ளது. நூலாசிரியர் பெயர் முதலியன விளங்கவில்லை.

---

## (d) நாட்டியல்பு

## NĀṬṬIYALPU.

Foll. 37a—48a.

Contains some geological and geographical information about certain places in South India.

Incomplete.

**Beginning :**

நாகார்ச்சுன தேவன் செய்துவைத்தது.

மதுரை நாடு.

பரிச வேதிகள், உதக மூலிகைகள், தலங்கள், சுனைகள் இவைகளிலுள்ள புதுமைகளைச் சொல்லுகிறார்.

மதுரை நாட்டிலே நாகமலையென்றும் பசுமலையெனறும் உண்டு. நாகமலை, முகப்பில் தலைபோலேயிருக்கும். அவ்விடத்திற் சென்று நாகமலையிரண்டு கடவாய்க்குக் கீழாகச் சித்திரை மாதத்திலே பாலசந்தண்டு. [வட்ட](ஒற்றை) சாண் நீளம் அகப்பை போலே உண்டுபண்ணி இரண்டு கடவாய்க் கீழாக(ச்) சாணுழம்மண்ணைத் தோண்டினால், கீழே பொற் பிரகாசம் போலேயிருக்கும். அந்த மண்ணைக் காற்றுப்படாமல் பொற் பிரகாசமாயிருக்கும் உடம்பில் ஊ[த்தை](ற்றுகை)யில் நாகலோகம் பேதிக்கும்.

**End :**

கொங்கு[ணு](நா)டு.

இ[ன்ஞ](ந்நா)ட்டில்[னீ](நீ)லம்பேரூரென்பதொரு ஊருண்டு. அந்த ஊருக்கு வடக்கே நதெளு மண்ணெ[ண](ன்)ஞெரு கல்லுண்டு. அந்தக் கல்லுக்கு வட பு[ர](ற)த்தில் ஒரு சுனையுண்டு. அந்தச் சுனைக்கரையில்[த்]தேரைக்கல்லுண்டு. அதைப் பொடி செய்து பஞ்சலோகம் உரு[கு]கி[ர](ற) முகத்தில்[கு](கொ)டுக்கத்தங்கமாம்.

இ[ன்ஞ](ந்நா)ட்டில் நீலம்பூரிலே உக்கிரமாகாளியென்று பகவதி கோயிலுண்டு. அதின் முன்னே ஒரு கல்லுக்கிணறு உண்டு. அதின் வடபு[ர](ற)த்திலே சந்(தி)மத்தியான வேளையிலே பார்க்க மின்மினிப்புழுப்போலே ஒரு இடைகல்லெல்லாம் ? அதில் பஞ்சலோகம் தாக்கினல் பேதியாம். இந்தக் கல்லிலே ஒரு மாவின் பொடி செய்து பஞ்சலோக முரு(கு)கி[ர](ற)முகத்தில் போடப் பேதியாம்.

**Colophon :**

(இவ்வாறு குறையோடு) நாட்டியல்பு முற்றும்.

(கு-பு.)—

இது, தென்னிந்தியாவில் சிற்சில மலைகளின் அருகிலும் ஊர்களின் அருகிலும் பரிசவேதி முதலியனவும், சிலகற்களும், பொன் முதலியனவும் இருப்பதாகவும், சில மூலிகைகளால் சிலவிடத்து மண்ணைப் பொன் முதலிய லோகங்களாக்கலாமென்றும் கூறுவது. முற்றுப்பெறவில்லை.

## (g) ஆதிநாதர்வாகனக்கவிதை.
ĀDINĀTHARVĀHANAKKAVITAI.

Foll. 77a—79a. Fol. 79b is left blank.

Brings out the greatness of god Ādināthar worshipped in the Vaiṣṇava temple at Alwartirunagari by praising the different vehicles used in the festivals celebrated in that temple.

Complete.

**Beginning:**

சுவாமி ஆதிநாதர் வாகனக்கவிதை.

பேரா யிரமுடைய பெம்மான் பொலிந்துநின்ற
நாரா யணன்வழுதி நாடாளன்—சீரார்
திருப்பவித்[தி]ர மாலெதிருவி[ளா](மூா) வின்பக்
குருப்பவித்ர மாக்கியதா கும். (க)

ஆடித் திருநாள்நம் மாறிக் கடவுளு[ற்](க்)கு
நாடிச் சிறப்பா நடத்துவது[ச்]—சூடிக்
கொடுத்தாள் கலியாணங் கொண்டருளி வீதி
நடுத்தா[ய]னுலாவலாய் நாட்டு. (உ)

**End:**

வாழி திருக்குருகூர் வல்லி பொலிந்துநின்றூர்
வாழி சடகோபர் வா[ளி](ழி)யே—வா[ளி](ழி)
யெதிராசனவுள் ளுக்(?)கொர வா[ளி](ழி)(வாழி)
கதிகூர் திருவோலக் கம்.

**Colophon:**

சுவாமி ஆதிநாதர்பேரில் வாகனக்கவிதை முற்றும்.

(கு-பு.)—

இது திருக்குருகூரில் கோயில்கொண்டுள்ள ஆதிநாதஸ்வாமியின் வாகனங்களின் சிறப்புணர்த்துவது.

---

## (h) நம்மாழ்வாரூஞ்சற்கவிதை.
NAMMĀḶVĀRŪÑJAṞKAVITAI.

Foll. 80a—87a. Fol. 87b is left blank.

A swing-song poem in praise of Nammāḷvār.

Complete in 20 stanzas.

**Beginning:**

சுவாமி நம்மாழ்வார்பேரில்[ப்]பாடிய ஊஞ்சல்[க்]கவிதை.

வயல்பூத்த செழுங்கமல வாவிபூத்து
வளம்பூத்த திருக்குருகூர் மழைக்கார்நீலப்
புயல்பூத்த திருமேனிப் பொலிவுபூத்த
பொலிந்துநின்ற மாதவனூ ரூஞ்சல்[ப்]பாட

வியல்பூத்த[து](தொ)டையடிச் ரெழுத்து(ச்)சொற்பூத்
தியாப்பலங் காரம்பூத்த விசைவல்லாளன்
கயல்பூத்த விழியுடைய நங்கையீன்ற
காரிமா[ர](ற)[ப் பிராஞ்](ன்)சரணங் கா[ற்](ப்)பதாமே.

காப்பு. நன்ருக கு[ளை](ழ)க்காதர் துணை.

பூமாதுபொலிந்தமணி மார்பிலாடப்
புயமாடவதிற்றுளப மாலையாடத்
தேமாலைநடுவில்வச்சிர மாலையாடச்
செம்பொன் முடி யாடர[ற்றி](த்ந)ச் சுட்டியாடக்
கோமான்றன் தமிழ்மாலை பாடியாடக்
கு[ளை](ழை)யாட வயிணவர்கு[ள](ழ)ாங் கொண்டாட
வாமாறு புக[ள்](ழ்)படைத்தோ ருடிரூஞ்சல்
ஆதிநா தப்பெருமா ளாடி ரூஞ்சல். (க)

அரம்பையர்கள் பதம்பெயர்த்து நடனமாட
வயிராணி யுருப்பசி வெள் ள(ை)டப்பையேந்த
நரம்பிசைத்து நாரத[ராழ்வார்](ஞர்) வாசித்தேத்த
நாவாணி யருகிருந்து கீர்த்திபாட
நிரம்புபுக ழெதிராச னே வல்கேட்ப
நீதிபயில் வயிணவர் பல்லாண்டு கூற
வ[ரு](ர)ந்தருமுத் திரைக் கரத்தா ருடிரூஞ்சல்
வகுளபூஷணவரத ருடிரூஞ்சல். (உ)

**End :**

செந்திகிரி நாலிவகு கால்கள்நாட்டித்
திக[ள்](ழ்)வயிரத் தாலவட்டஞ் சிரந்துபூட்டி
அந்தமுள்ளதாயகள்[போற்] பொற்சங்கிலிகள்நாட்டி
அ[ள](ழ)காய் வரியமரகதப் பலகைசேர்த்துக்
கந்தமுள்ள மலரின்வெகு விதானந்தூக்கி(க்)
கவிஞர்களுயரூஞ்சல் மிசைக்கவிகள்பாடி
முந்துகவி வாணரிருவடந் தொட்டாட்ட
முத்திரைக்கை நம்மாழ்வா ராடிரூஞ்சல்.

**Colophon :**

திருமேனி திருவேங்கட கவிராயர் கு[ரு](ர)வே நம[ர].

சுவாமி நம்மாழ்வார்பேரிற்பாடிய ஊஞ்சல் திருநாமம் முற்றும்.

(கு-பு.)—

இது நம்மாழ்வார் விஷயமான ஊஞ்சல். இருபதுவிருத்தப் பாக்களா லாகியது. இயற்றியவர் இன்னாரெனத் தெரியவில்லை. இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது. இதன் பின்னர் நான்கு ஏடுகளில், நம்மாழ்வார் விஷய மான நலங்குப் பாடலொன்றும், திருமஞ்சனப் பதமொன்றும், தென்திருப் பேரைக் குழைக்காதர் பெருமாள் விஷயமான பாடலிரண்டும் எழுதப்பட் டுள்ளன.

(i) வைத்தமாநிதிப்பெருமாள் விடுகவிதை.
VAITTAMĀNIDHIPPERUMĀḶ VIḌUKAVITAI.

Foll. 92a—95a.

Same work as that described under R. No. 427 (a) *ante*.

Complete.

(கு-பு.)—

இது, மூவருடத்துக் காட்லாக் 427(a) நம்பர் பிரதிபோன்றது. அன்னை வே யிதிலுமுள்ளது.

---

(j) வைத்தமாநிதிப்பெருமாள் வாகனக்கவிதை.
VAITTAMĀNIDHIPPERUMĀḶ VĀHANAKKAVITAI.

Foll. 95a—102b.

Brings out the greatness of God Vaittamānidhipperumāḷ worshipped in the temple at Tirukkōḷūr near Āḻvārtirunagari, by praising the different vehicles used in the festivals celebrated in that temple.

Complete.

**Beginning:**

வாழிபுகு மூர்வைத்த மாநிதிமால் நீடூழி
வாழி தமிழ்தேர் மதுரகவி—வாழி தினம்
வாழி குருகைமகிழ் மாலைப் பிரான் வாழி
வாழியெதி ராசமுனிவன். (க)

இந்தக்கவிதை வெண்பா.

* * * *

தோளுக்கினியான் கவிதை.

சொன்னநவ ரத்நமிகு தோளுக் கினியான்மேல்
மன்னுபுகு மூர்வைத்த மாநிதிமால்—இன்னிலத்தோர்
போற்றிசெய வீதிப் புறத்துப் பவனிவந்தார்
நாற்றிசையுஞ் சீர்படைத்த நாள்.

* * * *

சிங்காசனக்கவிதை.

* * * *

சங்காழியேந்துந் தமிழ்ப்புகுமூரர் தமனியப் பொற்
சிங்காசனத்திற் பவனிவந்தாரவர் சேவை கண்டு
கொங்கார்குழற்பெண் விரகம்பொறுள் மடக்கோதை நச் சீர்
வெங்காம பாணந்துளைக்குங் கொல்லோவிவள் மெய்யொக்குமே.

* * * *

கலித்துறை.

மலைவாங்கு மாருதிமேற் புகுமூ[ரனை](ர்) வைத்தமா நிதிகைச்
சிலைவாங்கி யம்புமொடுந் திறலாக்க ரக்?
கொலைவாங்கு சேனைக்குலம் வாங்கவோர் தொண்டர் கூட்டமெல்லா
நிலைவாங்கிய கலிநீங்கு[வ]தற் கோ வென்னை நீதி யிதே.

**End:**

வெண்பா.

திண்ணமா மாடஞ் சிறந்தபுகு மூரினில்விண்
மண்ணளந்த மால்வைத்த மாநிதியெங்—கண்ணனென
வெண்[ணை](ணெய்) திருடிநெடு வீதி யுலாவவந்தார்
எண்ணமெலாந் தீர்த்தருள வென்று.

**Colophon:**

சுவாமி வைத்தமாநிதிப்பெருமாள்பேரில் வாகனக்கவிதை எழுதி முகிந்தது. முற்றும்.

சுவாமி நம்மாழ்வார் து(ணை).

(கு-பு.)—

இது, திருக்கோளூரில் வைத்தமாநிதிப்பெருமாளுற்சவத்தில் கருடன் முதலிய வாகனங்களில் திருக்கோலங்கொண்டருளும் திருமாலைக்கண்டு சேவித்து ஈடுபட்டு வாகன முதலிய சிறப்பைப் புகழ்ந்து பாடியது.

நூலாசிரியரின்னாரெனத் தெரியுவில்லை. இத்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது.

---

## (*k*) பெரியதிருவடி தோத்திரம்.
## PERIATIRUVAḌITŌTTIRAM.

Foll. 103*b*, 104*b*.

A eulogy addressed to Garuḍa, installed in the north-east corner of the temple of Saṭhakōpa in Āḻvārtirunagari.

Complete.

**Beginning:**

ஓம் நன்றா குருவே துணை.

பெரியதிருவடி நயினார்பேரில்[ப்]பாடிய ஆசிரிய விருத்தம்.

நீயே கதியென்று பாமாலைபாடி நினைந்துருக
நாயேன் தனக்கருள் பாலிப்பையே மறைநான்கு நிரைத்
தாயே கருணைக்கடலே தவம்பெற்ற தாய்விநதைச்
சேயே குருகைப் பதிவா[ள்](ழ்) பெரிய திருவடியே. (க)

**End:**

தானே தனக்குச் சரியானபாதந் தனதடிமை
யானே பிறப்புமி[ர](ற)ப்புமற்றே னென்னை யாண்டுகொள்வாய்
கோனே குருகைவடகீழ் மூலைமதிற் கொலுவிருக்குந்
தேனே பறவைக்கரசே பெரிய திருவடியே. (டு)

வருவான் பெரியதிருவடி நாதனிவ் வாரணத்தால்[த்]
தருவான் பெரியதிருவடி நாதனித் தாரணியில்
உருவாய் வளர்ந்து வடகீழமூலையில் வளர்ந்தருளுங்
குருவாம் பெரியதிருவடி நாதனெங்[கள்] குலதெய்வமே. (௰௪)

**Colophon:**

பெரியதிருவடி நயினார்பேரிற் பாடிய ஆசிரியவிருத்தம் முற்றும்.

திருமேனி கவிராயர் கு[ரு](ர)வே நம[ர].

ராமஜெயம்.

(கு-பு).—

இது, திருக்குருகூரில் சடகோபர் கோவில் மதிலின் வடகிழக்கு மூலையில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள பெரியதிருவடி யென்னும் கருடனது தோத்திரம். பதினான்கு கட்டளைக்கலித்துறைகளையுடையது. இதன் முதலிலும் இறுதியிலும் ஆசிரியவிருத்தமெனக் குறிக்கப்பட்டது பிழை. முற்றுமுள்ளது.

---

## (l) குழைக்காதர் பதிகம்.
## KULAIKKĀDAR PADIKAM.

Foll. 105*a*, 106*a*.

Twelve stanzas in praise of Kuḻaikkādar worshipped at Tentirupperai near Āḻvārtirunagari.

Complete.

**Beginning:**

நூற்றெண்மர் [வெண்பா.]

திருமேனிக்கவிராயர் கு[ரு](ர)வே நம[ர].

வார்மணக்குங் கொங்கை மயில்மணக்குஞ் சாயல்குழல்
கார்(மணக்குஞ்) சாந்து மதுகைமணக்கக் காரியமென்
போர்மணக் குமைவாய புக[ள்](ழ்)மணக்கவே கதிராய்
கூர்மணக்கு நேமி(க்) குழைக்காதர் மாமுகிலே. (௧)

**End:**

த[ளை](ழை)க்கா த[ள](ழ)கர்[த்] திருப்பேரைவல்லி யென்றுமயரொடும்
பி[ளை](ழை)க்கா தர்மங்கல நாணுழிவாழி பிரகரமுஞ் சூ[ள்](ழ்)
மழைக்காடுபூத்த திருமேனிவள்ளல் மகர நெடுங்
குழைக்காதர் வாழியென வாழி பிள்ளைக்குழாங்க[மு](ளு)மே. (௰௨)

**Colophon:**

முற்றும்.

(கு-பு.)—

இது தென் திருப்பேரையென்னுந் தலத்தில் அமர்ந்துள்ள குழைக்காதர் என்னுந் திருமால் விஷயமான துதி. பன்னிரண்டு பாடல்களாலாயது. 106*b*ல் தென் திருப்பேரை விஷயமான வெண்பா வொன்றும் கட்டளைக்கலித்துறையொன்றும் எழுதப்பட்டுள்ளன.

## (m) குழைக்காதர்பேரில் பாடியபதம்.
## KUḺAIKKĀDARPĒRIL PĀḌIAPADAM

Foll. 107*a*—108*a*. 108*b* is left blank.

Rhythmic songs in praise of God Kuḻaikkādar worshipped at Tentiruppērai near Āḻvārtirunagari.

Complete.

**Beginning:**

ஓம் நன்றாக குழைக்காதர்பேரில் பாடிய பதம்.

கலியாணிராகம்—ஆதிதாளம்—பல்லவி.

வந்தெனக் கருள்செய்குவாய்—மாலே வருணன்
ஆராதனைசெய் திருமாலே,
சந்தனப் பொழிலுலவு—தென் திருப்பேரையில்
வருங் கொந்தலர்ந்த பேரைவல்லி சந்ததமும்
மருவிவாழ-வந்தெனக் கருள்செய்குவாய்.

**End:**

நாவினால் யான் நமோ நாராயணா வென
நாங்கள் துதிக்கவருள் நலந்தரு வோனே
காரியமாகவந் தென்னைக்
கருணைக் கடைக்கண் பார்த்தென்
கவலைகளெல்லாம் திருமாலே.

**Colophon:**

ஸ்ரீராமஜெயம். திருஞானமுத்திரை துணை.
திருமேனி-திருவேங்கட கவிராயர் கு[ரு](ர)வே நம[ர].

(கு-பு).—

இது தென்திருப்பேரைக் குழைக்காதர் என்னும் திருமால் விஷயமான இசைப்பாட்டு. இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது.

---

## (n) நூற்றெட்டுத்திருப்பதி வெண்பா.
## NŪṞṞEṬṬUTTIRUPPADI VEṆPĀ.

Foll. 109*a*—124*a*. 124*b* is left blank.

Stanzas in the Veṇpā metre extolling the greatness of the 108 Vaiṣṇava shrines and the images of God Viṣṇu worshipped therein.

Complete.

**Beginning:**

தோதாத் திரிநாதன் துய்யசெம்பொற் பாதத்தைக்
காதலுடனே தொழுது கண்குளிர்ந்தேன்—சீதமலர்
மேலுறைச்ரீ வரமங்கை மேவி வளர்மார்பா
தாலுவினி லுன்பெயர்தந்தாள்.

* * *

தொன்னெறிசேர் வாய்மை துலங்குபுகழ்ச் சோணாட்டு
நன்னகர்தோ றென்னா ரணமூர்த்தி—மன்னுதுயி
லேய்ந்திருத்த னிற்ப தெடுத்திசைத்தேன் செந்தமிழா
லாய்ந்தவர்தஞ் சொற்கொ டறிந்து.

பொதிய வரைதிகழும் பொற்பாண்டி நாட்டுப்
பதிதொறுமால் வாழ்ந்தளிக்கும் பண்பை—முதியவர்தஞ்
சொல்லா லறிந்து துயி[ல்வி](வி)ருப்பு நிற்குநெறி
யெல்லா மெடுத்திசைத்தேன் யான்.

* * * *

சோழமண்டலம்.

சீரிணங்கு பொன்னித் திருநாடு போற்றவளர்
வரணங்கு கண்ணா னெகினமாச்—சேருமயன்
முன்னரங்கங் காட்டி மொழிவேத நம்பெருமான்
பொன்னரங்க நெஞ்சே புகல். (க)

புகலும் ப(ர)சமயம் புக்கவரு மெவ்வா
றகதினைப்ப ரவ்வாற னிப்(ற்)பான்—திகழுமறைத்
துன்னார் தமிழுறையூர்ச் சோழனருண் மாதோடு
நின்றான் மணவாள னே. (உ)

**End:**

நானிலமு மாதவரு நான்முகனுங் காண்பரிதென்
மேனினைவுற் றாரால் விளம்பலாம்—வானுலகென்
வீடன்பாய் முத்தரினம் வேண்டப் பரமூர்த்தி
சேடன்பால் வீற்றிருக்குஞ் சீர். (௱அ)

* * *

துயிலும் பதியிருபத் தோரைந் திருப்பா
மியலு மிருபத் திரண்டும்—பயிலுநிலை
யூராகு மைம்பத்தே ழோர்நான் குலகளந்
தேர்ம்பதிகள் நூற்றெட் டில.

நளினரங்க மாதிதிரு நண்ணுதலம் போற்றி
யினிதுரைக்கும் வெண்பா நூற் றெட்டுங்—கனியுரைத்
துன்னுவார் கற்பாருமப்பவார் (?) புவிவாழ்வு
மன்னுவார் வீடுமெய்து வார்.

வாழி திருப்பதிகள் வாழி திருநெடுமால்
வாழி திருக்குருகூர் வாழ்மாறன்—வாழிதமிழ்
ஆழ்வார்கள் வா(ழி) யருள்வயிணவ[ர](ர்களா)ய்
வாழ்வார்கள் வாழி மகிழ்ந்து.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

(கு-பு.)—

இது நூற்றெட்டு விஷ்ணுஸ்தலங்களையும் அத்தலங்களிலமர்ந்துள்ள திருமாலையும் பற்றியது. அந்தாதித்தொடையாமைந்தது. முற்றுமிருக்கிறது.

(o) நம்மாழ்வார்பதம்.
NAMMALVĀRPADAM.

Foll. 125a—128a.

Similar to the work described under sub-division (e) of this number. Incomplete.

**Beginning:**

சுவாமி நம்மாழ்வார்பேரில் பாடிய பதம்.

உன்னையல்லாவொரு தெய்வமு மெண்ணுது
நெஞ்சமுனக்குண்மை சொன்னேன்
எனக்குன் பாதபங்கயம் நீதஞ்சம்
கன்னவில்வேளும் வணங்கும் பிரதாபா
மன்னுமிசைத்தமிழ் வண்சடகோபா—உன்னை—

**End:**

உண்மை சொன்னேனய்யா—உன்
அடிமைக்கு ளடிமையாய்
உண்மை சொன்னேனய்யா—
கருக்கு[ளி](மி) பு[கள்](கு)ந் தென்னைக்
காத்தருள்வீரா—செல்வத்
திருப்புளிங் கீ[ள்](ழ்)வளர் செண்பகமாறு.

* * * *

கைவசமாய் நெல்லிக்கனிபோலிப்போது
குலதெய்வமு நீயென்று தெளிந்தேனந்தப்பாடு—உண்மை சொன்னேன்.

(கு-பு.)—

இது நம்மாழ்வார் விஷயமான இசைப்பாட்டு. இயற்றியவர் பெயர் முதலியன விளங்கவில்லை. இந்தப் பிரதியில் முற்றுப் பெற்றதாகத் தெரியவில்லை.

---

(p) முருகன்பதம்.
MURUKANPADAM.

Foll. 128b—129a.

A rhythmic stanza in praise of God Subrahmaṇya worshipped at Kunṟanakar or Kunṟakkuḍi in the Madura district.

**Beginning:**

சந்நிதி கண்டுகொண்டேன்—கண்டவுடனே
சவுபாக்கியம் பெற்றுக்கொண்டேன்.
செந்நெல்விளையுங்குன்றை நன்னகர்தனில் வாழுஞ்
சிவனருள் சரவணபவனிலகிய திருச் சன்னிதி

**End:**

அருள் மு(ரு)கனை வாழ்த்தி நவிலுங்கவிக்குஞ்சு
நற்றமிழரங்கேற்றிக்
கானமலர் பரித்துச் சேவடி தனில் சாத்திக்
கந்தா கந்தா வரந்தா வென்று போற்றிச்
சந்நிதி கண்டுகொண்டேன்—கண்டவுடனே
சௌபாக்யம் பெற்றுக்கொண்டேன்.

(கு-பு.)—

இது குன்றநகர் முருகக் கடவுள் விஷயமான இசைப்பாட்டு.

---

## (ஓ) தனிப்பாடல்.

## TANIPPĀḌAL.

Foll. 129*a*—138*a*. 138*b* is left blank

Stray stanzas in praise of Garuḍa, Viṣṇu, Nammāḻvār, etc.

**Beginning:**

மாசித்தே ரோட்டிவைத்து மாசனங்கள் சூழ்ந்துவரப்
பூசிக்கு மர்ச்சகரும் பொற்றட்டில்—தேசிகனும்
தானிருக்கத் தேர[ட்](ச்)சுத் தான்முரிந்து போனசியல்
மாதிலசூர் சொல்வார் மான்பூ (க)

முல்லா கலகத்தில் முன்னிற்கலாகா தென்றெண்ணியன்றே
சில்லாவை விட்டு மலைமேற்[ச்] சிலத்தில் மறைந்திருந்து
பொல்லாப் பயல்களைப் போக்கடித்தே யி(ந்த)ப்பூதலத்தில்
நல்லார் குருகையில் வந்தேயிருக்கு நற்றேசிகனே. (உ)

**End:**

சி[ரீ]நகரவாச வுல் லாச கெம் பீரனே
சிரீதரப் பொரு ளாதியைத்
திருநெடுந்தோள் மீதெழுந்தருளி வரும்
வலங்கொள் பெரிய திருவடியையான்,
தேனகுந்துளபவுன் சேவடியை யென்றலை
செலுத்தவருள் செய்த தேவே
செகமெலா மூனைவந்து சேவிக்கவவர்கள் தம
திஷ்டங் கொடுக்கு மேரு,
வானகமு மண்ணகமு மற்றுமண்டங்களை
வயிற்றினிலடக்கு மாலை
வண்பிடரி மேலடக்கி வயினதேயனெம்
வறுமைதனை மாற்று தருவே,
பானகமு நாளிகேரமு மிரதகலசமு
முகந்த பறவைக் கரசனே
பலந்தருஞ் சமயமது தாருமெங்கட்கிறைவ
பட்சிராசக் கடவுளே.

* * * *

நாறுகு[ளி][ழி]யி லொரு மெயவந்தபோது நொருங்கடித்துக்
கூறும்பு[ழு](ளு) கனுனக்கிணையோ வண்ட[ர்] கோ[ழு](ள)மட்டுந்
தூறும்பு[ழு](ளு) கனுனக்கிணையோ பொய் சொல்லவந்த
நாறும்பு[ழு](ளு) கனிமாறமர சாமிநாத நராதிபனே ?

(கு-பு.)—

இதில் பல தனிப்பாடல்கள் உள்ளன.

---

## (r) காமாட்சியம்மன்பதிகம்.

## KĀMĀTCIYAMMANPADIKAM.

Foll. 139*a*—143*a*. Fol. 143*b* is left blank.

Eleven stanzas in praise of Goddess Kāmākṣi worshipped in the Śaiva shrine at Conjeeveram.

Complete.

**Beginning:**

நன்றாக. காஞ்சீபுரம் காமாட்சியம்மன் பேரில் ஆசிரியவிருத்தம்.

---

மங்களஞ்சேர் கச்சிநகர் மன்னுகா மாட்சிமிசைத்
துங்கமுள நற்பதிகஞ் சொல்லவே—திங்கட்
பயமுறுகும் கணியணியும் பரமனுளந் தனின்மகிழுங்
கயமுறு[வ](மை)ங் கரணிருதாள் காப்பு.

---

சுந்தரி சவுந்தரி நிரந்தரி துரந்தரி
சோதியாய் நின்றவுமையே
சுக்கிரவாரத்தி லுனைக்கண்டு தெரிசித்தவர்
துன்பத்தை நீக்கிவிடுவாய்
சிந்தைதனி லுன் பதந்தன்னையே தொழுதவர்க
டு[து]யரத்தை யாற்றிவிடுவாய்
செகமெலாமுன் மா[ய்]ை[க](ய)புகழ வென்னாலாமோ
சிறியனால் முடிந்திடாது
சொந்தவுன்மைந்த னென்றென்னை ரட்சிக்குஞ்
சிறுகடனுன்ன தம்மா
சிவசிவமகே[ஸ்](சு)வரி பரம[னி](னை)ட யீசுவரி
சிரோமணி மனோமணியுந்நீ
அந்தரி நிரந்தரி துரந்தரி பரம்பரி[ஆ]
(ய)நாதி ரட்சகியுநீயே
அ[ள](ழ)கான காஞ்சியில் புக[ள](ழ)ாக வாழ்ந்திடு(ம்)
அம்மை காமாட்சியுமையே. (க)

**End:**

எத்தனை செனனமெடுத்தேனோ தெரியாது
இப்பூமி தன்னிலம்மா
இனியாகிலுங் கிருபைவைத்[து யெ](தெ)னைரட்சியு
மினிஜனன மெடுத்திடாமல்
முத்திதரவேண்டுமென் றுன்னையே தொழுதுநான்
முக்காலும் நம்பினேனே

*முன்னாபினாந் தோ[னா](ன்று)தமணிதரைப் போலநீ*
*[மு](வி)ழித்திருக்காதே யம்மா*
*வெற்றிபெற வுன்மீதில் பத்தியாய் நான்சொன்ன*
*விருத்தங்கள் பதினொன்றையும்*
*விருப்பமாய்க் கேட்டுநீ யளித்திடுஞ் செல்வத்தை*
*விமலனாரே[ஷ](ச)ப் போரூர்*
*அத்தனிட(ப்) பாகமதை விட்டுவந்தென்(னுடை)[ன]*
*யருங்குறை[ர](ற)யை(த்) தீருமம்மா*
*அ[ள](ழ)கான காஞ்சியில் புக[ள](ழ)ாகவாழ்ந்திடும்*
*அம்மை காமாட்சி யுமையே.* (௰௧)

**Colophon :**

*காமாட்சியம்மன் பேரில் ஆசிரியவிருத்தம் முற்றும். சுவாமி நம்மாழ்வார் துணை.*

(கு-பு.)—

*இது காஞ்சீபுரத்துக் காமாட்சியம்மன் விஷயமான பதிகம். எளிய நடையிலானது. இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது.*

---

## (௪) *ரங்கநாதர் ஊசற்கவி.*

RAṄGANĀTHAR ŪSAṞKAVI.

Foll. 144*a*—145*b*.

A swing-song poem in praise of god Raṅganātha and Goddess Raṅganāyaki worshipped at the Vaiṣṇava shrine in Srirangam.

Contains four stanzas only.

**Beginning :**

*ரங்கநாதர்பேரிற் பாடிய ஊஞ்சல்[த்]திருநாமக்கவி.*

*தார்சொரிந்த முத்தினு[ல்க்](ற்)கால்கள் நாட்டித்*
*தரும்பவளக்கரும்பதனால் வளைகள் சேர்த்து*
*வார்சொரிந்த சந்தனத்தா[ல்ப்](ற்) பலகைசேர்த்து*
*வரிசையுடனாள் ? பணிந்துபோற்ற(க்)*
*கார்பெருகுங் காவேரி மாலைபூண்ட*
*க[ஷ்த்](ஸ்)தூரி ரங்கருக்குக் கரு[னை](ணை)யாக(ச்)*
*சீருலவுங் காவேரியாடிரூஞ்சல்*
*சீரங்க நர்யகியா[ள](ரா)டிரூஞ்சல்.* (௧)

**End :**

*மாமறையோர் வேதாந்தக் கால்கள்நாட்டி*
*வஷ்டருடன்சற்பாத்தால் ? பலகை சேர்த்து(த்)*
*தாமரை நூலதனால்விட்டம் போட்டுச்*
*சதிராகப்பவாச் சிறந்த சரங்கள் பூட்டி(ப்)*
*பாமானசிங்கமான ரெங்கருக்கு(ப்)*
*பாவலர்கள் கொண்டுவந்து சமைத்தவூஞ்சல்*
*சேமநெடும் ரெங்கேசராடிரூஞ்சல்*
*ஸ்ரீரங்க நாயகனாராடிரூஞ்சல்.* (௪)

(கு-பு.)—

இது ரங்கநாதன் விஷயமான ஊசல். இதில் நான்கு பாடல்களேயுள்ளன. இதன் பிறகு 146a 150a வரையில் ஆழ்வார் திருநகரி பொலிந்து நின்றபிரான், நம்மாழ்வார், திருமாலிருஞ்சோலைமலை அலங்கார நாயகி, சீதாராமன் இவர்கள் விஷயமான ஊசல் பாடல்கள் ஒன்பது உள்ளன.

---

## (t) திருமால்தோத்திரம்.

## TIRUMĀLTŌTTIRAM.

Foll. 151a. - 154a 154b is left blank.

Stanzas in praise of Lord Viṣṇu who is requested herein to come on Garuḍa bless the supplicant.

Complete.

**Beginning:**

நன்முக. கெருடன் தோத்திரம்.

பூரணனே திங்கள் பதினலுசேரும்
பொருந்தியேயருக்கன் பதினெட்டுஞ்சேருங்
காரணனே கருமுகில்போல் மேனிசேருங்
கருணைபெ[ரு](று)வஷ்டாக்கரங் கலந்துவாழும்
வாரணனே லட்சுமியோரெட்டுஞ்சேரும்
மதிமுகம்போல் நின்றிலங்கு மாயாநேயா
ஆரணனோரகு ராமாகருடன் மீதி
லன்புட்னேயேறிவந்தருள் செய்வாயே. (க)

**End:**

துளபமணிமார் ப[ள](ழ)காசுகத்தைத் தாதா
சுருதியே மெய்ப்பொருளே வரத்தைத் தாதா
களபக[ஷ்](ஸ்) தூரியனே கடா[ச்](ட்)சந் தாதா
கஞ்சனை முன்வென்றவனே கருணை தாதா
பழம்பொருளே சிவசோதி பாக்கியந் தாதா
பத்திமுத்தி சித்திசெயவுன் பாதந் தாதா
அளவிலா மெய்ப்பொருளே கெருடன்மீதில்
அன்புடனே யேறிவந்தருள் செய்வாயே. (மஉ)

முற்றும்.

(கு-பு.)—

இது திருமால் கருடன்மீது வந்து அருள் செய்யும்படி பாடிய பதிகம்: நடை தாழ்ந்தது.

இதன் தலைப்பின் கருடன் தோத்திரம் என்றிருப்பது பிழை.

இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது இது முடிந்த பின்னர் 155a ல்

படிமிசைவாழுமாந்தர் பவிசுவந்துற்றபோது
கொடியிடைமடவார்காதல் கொள்ளுவார் நம்மையெண்ணுர்
மிடியிடைப்பட்டபோதும் வியாதியாய் மெலிந்தபோதும்
அடியினைத் தொழுவாரென்றே யாறுமைக்கருளிச் செய்தார்.

என்னும் செய்யுள் எழுதப்பட்டுள்ளது.

## R. No. 460.

Palm-leaf. 11⅞ × 1½ inches. Foll. 18. Lines, 12–15 in a page. Tamil. Fair.

Presented in 1920—21 by Sundarammā of Ālvārtirunagari, Tinnevelly district.

### (a) ஆதிநாதரூசற்கவிதை.

### ĀDINĀTHAṚŪSAṚKAVITAI.

Foll. 1*a*—3*b*.

A swing-song poem addressed to God Ādināthar, worshipped at the Vaiṣṇava shrine at Ālvārtirunagari in the Tinnevelly district.

Contains the stanzas 1—27 complete and 28th incomplete.

**Beginning :**

சுவாமி ஆதிநாதர் பேரிலூசற்கவிதை.

வயல்பூத்த செழுங்கமல வாவிபூத்து
வளம்பூத்த திருக்குருகூர்மழைக்கானீலப்
புயல்பூத்த திருமேனிப் பொலிவுபூத்த
பொலிந்துநின்ற மாதவனூர்க் கூஞ்சல்பாட
வியல்பூத்த தொடைபடி சீரெழுத்துச் சொற்பூத்
தியாப்பலங்காரம்பூத்த விசைவலாளன்
கயல்பூத்தவிழியுடைய நங்கையீன்ற
காரிமாறன் சரணங் காப்பதாமே. (க)

கருங்குவளைக் காடு செழுங் கமலம் பூத்த
காட்சியெனத் திருவுடம்பிற் கருணைபூத்து
மருங்குவளைத் தழுகொழுகுங் கை காலுந்தி
வாய்நயனந் திருமுக மவ் வடிவுகாட்ட
வொருங்குவளைத் தண்கதிர் வெண்ணி லவுகாட்ட
வொருதிகிரி பருதிகிரி யுதயங்காட்ட
நெருங்குவளைக் கைமலராள் வடந்தொட்டாட்ட
நின்றவாதிப் பிரானூடி ரூஞ்சல். (உ)

**End :**

தேங்கமலக் கோதைதவஞ் செய்வதாலிச்
செகத்திலிவ்வூர் திருநகரி யாமென்றேத்தப்
பாங்கமலக் கண்ணி[நு](னு)ட்படாது தாந்தன்
பண்புறவாராதனஞ்செய் பரிவிலாழி
தாங்கமலக் கை முகங்கண் ணுறுப்பியாவுந்
தயங்குகரு மலேபோல் வந்தானென்றூதிப்
பூங்கமலத் தோன் பரவு மிக்கவாதிப்
பொலிந்து நின்ற யாதவனூ ராடி ரூஞ்சல். (உஎ)

மருளிலாப் பொய்நின்ற வேதசாரம்
வடித்தெடுத்துத் திரட்டி முது தமிழ்ப்பாமாலே
தெருளிலாதவன் போலத் . . . . . . . .

(கு-பு.)—

இது ஆழ்வார் திருநகரியெனப்படும் திருக்குருகூரில் அமர்ந்துள்ள ஆதிநாதரென்னும் திருமாலின் துதிரூபமானது. இந்தப் பிரதியில் 1—27 பாடல்களும் 28-வதன் முதலடிமட்டுமேயுள்ளது. ஆதலின் முற்றுப்பெறவில்லை. நூலாசிரியர் இன்னாரெனத் தெரியவில்லை.

---

(b) திருக்குருகூர்வல்லியாருசல்.

TIRUKKURUKŪRVALLIYĀRŪSAL.

Fol. 1.

A swing-song eulogy addressed to Goddess Ādināthavalli worshipped at Tirukkuruhūr also called by the name Ālvārtirunagari.

Contains four stanzas only.

**Beginning :**

கருக்குழியிற் பலவிதமாய்ச் செனிக்க வேதன்
    கைசலிக்கப் படையாது காலதூதர்
வெருக்கொளவந் தடித்திழுத்துக் கொடுபோய்ச் செந்தீ
    மிகுதிரையத் தூடழுந்த விடாமலேயன்
பருக்குதவி யாக முத்தி கொடுக்கச்செய்த
    பாக்கியமா னுதிமால் மகிழ்ச்சி கூரத்
திருக்குருகூர் வல்லியா ராடி ருஞ்சல்
    சீபூமி நாயகியா ராடிருஞ்சல். (க)

**End :**

கோதை சூடிக்கொடுத்தா ளாடி ரூஞ்சல்
    கூறும்ரெங்க நாயகியா ராடி ரூஞ்சல்
நீதியலர் மேலுமங்கை யாடி ரூஞ்சல்
    னீளாபுவி மடந்தையினி தாடி ரூஞ்சல்,
சீதை சனகன்மகளி ராடி ரூஞ்சல்
    திருக்குருகூர் வல்லியாராடி ரூஞ்சல்
ஆதிலெட்சுமி தேவியா(ரா)டி ரூஞ்சல்
    அருளாதி நாய்ச்சியா ராடி ரூஞ்சல். (ச)

(கு-பு.)—

இது திருக்குருகூரில் அமர்ந்துள்ள நாய்ச்சியார் விஷயமானது. இந்தப் பிரதியில் நான்கு விருத்தங்களேயுள்ளன.

---

(c) சடகோபருசல்.

ŚAṬHAKŌPARŪSAL.

Foll. 5a—7b.

A swing-song poem in praise of Nammālvār also called Śaṭhakōpa.

Contains 23 stanzas only.

**Beginning :**

சுவாமி ஆழ்வார் பேரில் ஊசற்கவிதை.

இந்திரநீலத்திரண்டு கால்கள்நாட்டி
யிலங்கும் வயிரேயத்தாலவிட்டம் பூட்டிச்
சுந்தரமுத்தேறிமெம் பொற்சங்கிலிகள் நாற்றிக்
சுடரெறிக்குஞ் செழும்பவளப்பலகை சேர்த்துக்
கந்தமலரென்னும்பொன் விதானம்நாற்றிக்
கயல்விழியார் மயல்புரி பொன்னூஞ்சல்மீது
செந்த(மி)ழ்வண் சடகோபராடிரூஞ்சல்
சீபராங்குச முனிவனாடிரூஞ்சல்.

**End :**

சித்தவதாரத்தொடு சேர்வார்க்குக்கிட்டா
தென்றேயச்சித்துவிட்டு யோகமேற் செய்
வித்தவதாரத்தாவட்டாங்க யோக
வித்தாரமெய்ப் பொருளேவிளங்குஞானக்
கொத்தவதாரத்தனுகா வொளியே தொண்டர்
கொடுங்கலிதீர்த்தருள் குருகூர்க்கொண்டல்வண்ணன்
பத்தவதாரத்தின்வரன் முறையைத்தேர்ந்து
பாடவல்ல பெருமாளேயாடிரூஞ்சல். (உஉ)

வாழிதிருக்குருகை நெடிதூழிவாழி
மறைபுகலு நவபேரவடிவமான
ஆழிவழை ? கண்டுவில் வாளாதிநாதர்க்
கலங்கரித்த கதிர்மணிப் பொன்னூஞ்சலமீது
வீழிவாய் துவரிதழ்ப்பெண்முத்தமூரல்
விற்புருவநங்கை மகாதவதிற்றேன்றுஞ்
சூழிமுகக்கரட்தட விகடவேதச்
சொற்கவிமாமதகளிற்றைத் தொழுவம்யாமே. (உ௩)

(கு-பு.)—

இது திருக்குருகூரிலவதரித்துள்ள சடகோபரென்னும் நம்மாழ்வார் விஷயமானது. இயற்றியவரின்னாரெனத் தெரியவில்லை. இந்தப் பிரதியில் 23 பாடல்களேயுள்ளன.

---

## (*d*) வைத்தமாநிதிப்பெருமாளூசல்.

## VAITTAMĀNIDHIPPERUMĀḺŪSAL.

Foll. 8*a*—9*b*.

A swing-song poem in praise af God Viṣṇu, worshipped under the name Vaittamanidhipperumāḷ at Tirukkōlūr near Āḻvārtirunagari.

Contains eleven stanzas only.

**Beginning :**

சுவாமிவைத்தமாநிதிப் பெருமாள்பேரிலூஞ்சற்கவிதை.

பார்பூத்த போதனையுந்தியினிற் பூத்துப்
பல்கோடியண்டமெலாம் பூத்தவெந்தை
கார்பூத்த திருமேனிப்பொலிவுபூத்த
கண்ணன்வைத்த மாநிதிமாற் கூஞ்சல்பாட
வார்பூத்தவுபயதன நங்கைபெற்று
மனங்களிக்க மறைப்பொருளியாவையுமா ராய்ந்து
சீர்பூத்தவியற்றிருவாய் மொழியைப்பாடுந்
திருநாவீறுடையபிரான் காப்பதாமே. (க)

பாரமகமேருவிரு கால்களாகப்
பணிமேகபடல நடுவட்டமாகக்
காருலவுமழைமாரி வடமதாகக்
கண்ணகன்ற பாருலகம்பலகையாகச்
சீருலவுநறுமலர் விதானநாற்றிச்
சிறப்பாகவலங்கரித்த வூஞ்சல்மீது
வாருலவுங்கனப்பெண் ணுண்டிலாள்சேர் (?)
வைத்தமாநிதிப்பெருமா ளாடிரூஞ்சல். (உ)

**End :**

சிறந்த திருவழுதி வளநாடுவாழி
திருக்குருகைமாநகர் நம்மாழ்வார்வாழி
யறந்தருவேதத் திருவாய்மொழிநூல்வாழி
யழகைநகராகிய தென்புகுரூர்வாழி
பிறங்குமலர்மாது புவிமாதுவாழி
பேசுபுகழ்மதுரகவியாழ்வார்வாழி
மறஞ்செயும்பொன்னாழி வலம்புரியும்வாழி
வைத்தமாநிதிப்பெருமாளாடிரூஞ்சல்.

(கு-பு.)--

இது, திருக்கோளூர் என்னும் திருப்பதியில் எழுந்தருளியுள்ள வைத்த மாநிதிப்பெருமாள் என்னும் திருமால் விஷயமானது. காப்புச் செய்யுளுடன் பதினொரு செய்யுளையுடையது.

---

## (e) வைத்தமாநிதிவல்லியாரூசல்.

VAITTAMANIDHIVALLIYARŪSAL.

Fol. 10.

A swing-song eulogy addressed to Goddess Lakṣmī worshipped under the name Vaittamanidhivalli at Tirukkōḷūr near Aḷvārtirunagari.

Contains the stanzas 1-4. complete and the 5th incomplete.

**Beginning:**

நாய்ச்சியார் வைத்த மாநிதிவல்லியாரூஞ்சற் கவிதை.

சிறந்தநவர[ற்றி](த்தி)ன மணியூஞ்சல்மீது
சிலைநுதலாளிருபுறமும் வடந்தொட்டாட்டச்
சுறவுவிழியு[ற](ரு)வசி நற்கவரிவீசச்
சொல்புகழுந்திலோத்தமை நின்றேவல்கேட்ப
நறவொழுகுதேமொழியாளம்மையந்த
நாமகள்நாற்பண்ணிறைத்து நல்லிசைகள்பாடச்
சிறந்தமறைசேர் தென்புகுழூர்வாழுஞ்
செல்விபெண்கள்வல்லியாராடிரூஞ்சல். (க)

**End:**

மலர்சூடிக்கொடுத்தாளாடிரூஞ்சல்
மங்கைசீவரமங்கையாடிரூஞ்சல்
அலர்மேலுமங்கையினிதாடிரூஞ்சல்
அருள்புவிமடந்தையினிதாடிரூஞ்சல்
தலமிகுசனகன்மகளாடிரூஞ்சல்
நாய்ச்சியார்லட்சுமிதேவியாடிரூஞ்சல்
வலமிகுதென்புகுழூர்வல்லியாடிரூஞ்சல்
வைத்தமாநிதிவல்லியாராடிரூஞ்சல். (ச)
தேன்கனிந்த மொ . . . . . .

(கு-பு.)—

இது வைத்தமாநிதி வல்லியென்னும் இலக்குமி விஷயமான துதி. இத்தப் பிரதியில் 1-4 பாடல்களும் ஐந்தாவது பாடலின் ஆரம்பமுமே உள்ளன.

---

(*f*) மதுரகவியாழ்வாரூசல்.

MADHURAKAVIYĀ<u>L</u>VĀRŪSAL.

Fol 11.

A swing-song poem in praise of Madhurakaviyāḷvār, worshipped at Tirukkōḷūr near Āḷvārtirunagari.

Contains eghti stanzas only.

**Beginning:—**

சுவாமி மதரகவியாழ்வார்பேரிலூஞ்சற் கவிதை.

சுருதிமறைப் பொருளனைத்தும் பகுத் தாராய்ந்து
சுருக்கமுறவுலகிலுள்ளோர் வெளிதாய்ப்பற்றப்
பரமபதநாயகன் மூவர்க்குமூலப்
பரம்பொருளாமெனத் திருவாய்மொழியைப்பாடுந்
திருமகிழ்மாறனைச் சகல[ெ]பந்த[ம](வ)ாகத்
தியானித்துத்தேவு மற்றுமறியேனென்று
பொருளமைத்துத் தமிழுரைத்துப்புகுழூர்வாழும்
புகழ்மதுரகவியாழ்வா ராடிரூஞ்சல். (க)

**End:**

சித்திரைமாதத் துதித்தோனூடிருஞ்சல்
திருமகிழ்மாறனைப் பணிவோனூடிருஞ்சல்
பத்தரி[று](ரு)தயத்துறைவோனூடிருஞ்சல்
பதினொருபாட்டினிதுரைத்தோனூடிருஞ்சல்
உத்தமமுக்குணங் கடந்தோனூடிருஞ்சல்
உபநிடதம்பகுத்துணர்ந்தோனூடிருஞ்சல்
வைத்தமாநிதியை யனுதினமும்போற்றும்
மதுரகவியாழ்வாரே யாடிருஞ்சல்.

(கு-பு.)—

இது, திருக்கோளூர் என்னும் தலத்திலவதரித்த மதுரகவியாழ்வார் விஷயமானது. இந்தப் பிரதியில் எட்டுப் பாடல்களேயுள்ளன.

---

## (*g*) ஆதிநாதருசல்.

## ĀDINĀTHARŪŚAL.

$8\frac{1}{8} \times 18\frac{1}{8}$ inches. Lines 5-7 in a page.

Foll. 12*a* – 16 *b*. 12*b* is left blank.

Similar to the work described under sub-division (*a*) of this number.

Contains 1—19 stanzas only.

**Beginning:**

நன்றாக. ஊஞ்சல்.

வயல்பூத்த செழுங்கமல வாவிபூத்து
வளம்பூத்த திருக்குருகூர் மழைக்கானில
* * * *
* * * *
கயல்பூத்த விழியுடைய நங்கையீன்ற
காரிமாறப்பிரான்சரணங் காப்பதாமே.

காப்பு. நன்றாக. கு[ளே](ழை)க்காதர் ஆ[ள்](ழ்)வார் திருவடிகளே சரணம்.

பூமாதுபொலிந்து மணிமார்பிலாடப்
புயமாடவதிற் றுளபமாலையாடத்
தேமாலைநடுவில் வச்சிரமாலையாட(ச்)
செம்பொன்முடியாடர[ற்றி](த்தி)னச்சுட்டியாடக்
கோமான்றன் தமி[ள்](ழ்)மாலைபாடியாடக்
கு[ளே](ழை)யாடவயிணைவர்கு[ளா](ழா)ங்கொண்டாட
வாமாறுபுக[ள்](ழ்)படைத்தோனூடிருசல்
ஆதிநாதப்பெருமாளாடிருஞ்சல். (க)

**End:**

தண்பொருநை சூழ்சோலை நகரமான[த்]
தமணியப்பொற்கோபுரஞ்சேர் குருகைவாசன்
பன்னிசைசொல் மகிழ்மா[ர](ற)ர் பரவிப்போற்றும்
பாவையர்சிரீபூமி நீளாதேவிகூட
நண்புடையவாதிமால்நாளும்வா[ளி](ழி)
நா[ட்](ய்ச்)சிமார்மூவர் திருவடிகள்வா[ளி](ழி)
எண்புவியோர்தொழு மிராமாநுசனும்வா[ளி](ழி)
யிசைபெருகு சடகோபருஞ்சல்வா[ளி](ழி). (கஅ)
காவுலவுபொ[ளி](ழி)ல்[க்]குருகைநகரம்வா[ளி](ழி)
கருணைபொ[ளி](ழி) பொலிந்துநின்றார் திருவடிகள்வா[ளி](ழி)
பாவலவர் நாரணர்பதம்வா[ள](ழ) வா[ளி](ழி)
பராங்குசமாமுனிவன்சிரீபாதம்வா[ளி](ழி)
தாவுபுகழ்நால்வேதமொ[ளி](ழி)யும் வா[ளி](ழி)
சதுரனெ திபதிவா[ளி](ழி) வயிணவர்கள்வா[ளி](ழி)
தாரணியிற்பாகவதர் வா[ள](ழ)வா[ளி](ழி)
தயாநிதியாம் . . . . . .

(கு-பு.)—

இதுவும் ஆதிநாதருஞ்சலே. முன் பிரதியினும் வேறுளது.

---

## R. No. 461.

Palm-leaf. 10¾ × 1 inches. Foll. 81. Lines, 6 in a page. Tamil. Fair.

Presented in 1920-21 by Sundarammā of Alvartirunagari, Tinnevelly district.

### தாமிரபர்ணி மாகாத்மியம்.
### TĀMIRAPARṆIMĀHĀTMIYAM.

A work on the sanctity of the river Tāmraparṇi flowing in the Tinnevelly district. The origin of Tāmaraparṇi, her becoming the daughter of Agastya at whose instance she flowed as a river, are also described.

Complete.

**Beginning:**

ஹரி: ஓம்.

தாம்[ப]ர[வ](ப)ன்னி ம[குள்](க)த்துவம்.

உலகெலாமுணர்ந்தோத[க்](ற்)கரியவன்
நிலவுலாவியநீர்மணிவேணியன்
அலகில்சோதி[யி](ய) னம்பலத்தாடுவான்
மலர்[ச்]சிலம்படிவா[ள்](ழ்)த்திவணங்குவாம்.
குருபாதமே கதி. தாம்பிரவர்ணி மாதாவினுடைய துணை,

தாம்பிரபன்னித்தலபுராணம்.

நைமிசாரணிய மென்றொரு வனமுண்டு. அதின் வரலாறு ஏதென்றால் [ப்] பூர்வத்திலே முனிவோர்களெல்லோருங்கூடிப் பிரமாவினிடத்திலே சென்று நாங்களெல்லோரும் ஏககாலமும் நீங்காமல் விருப்பமாக இருப்பதற்கு அதிலே தவசு பண்ணிக்கொண்டிருப்பதற்கு அளவில்லாத வனமாக ஒருவனங் கட்டளையிட்டருளவேணுமென்று வணங்கினார்கள். அப்போது பிரமாவும் ஒரு சக்கரத்தைப் படைத்துப் பூமியிலே உருட்டிவிட்டார். அதன்பிறகே நீங்களும் போய், அது தரித்தவிடத்திலே உங்க[ழு](ளு)க்கு வேண்டிய ஆபீடந்தருகிற வனமாக விருக்கும். அதிலே யிருங்கோளென்று அனுப்பிவிட்டார். அந்த முனிவர்களும் அந்தச் சக்கரத்தின் பின்னே வந்து அது தரித்த விடத்திலே வந்தவர்க[ழு](ளு)ம் அதுக்குப் பேரிட்டது. நேமிசாரணியமாகிய சக்கரந்தரித்தபடியினாலே நேமிசாரணியமென்று பேருமிட்டார்கள். * * * * *

* * * * * *

எங்களுக்குத் தாம்ரபர்ணியினுடைய மகத்துவத்தை(த்) திருவுள்ளம்பற்றவேணுமென்று கேட்டார்கள். * * * *

அந்தக் கதையை முனி உங்களுக்குச் சொல்லுகிறேன் ; நீங்க[ழு](ளு)ம் [பி] (ப)ராமுகமில்லாமல் கே[ழு](ளு)ங்கோளென்று சொன்னார்.

* * * * *

அந்த மலைப்பக்கத்திலே நாமும் நம்முடைய தேவியாரும் மற்றுமுண்டாகிய தேவர்களெல்லோருங்கூடி வந்து உமக்குக் காட்சி தருகிறோமென்று திருவுளம்பற்றித் தாமிரபர்ணி மாதாவை அகத்தியருக்கு மகளாக முறைமையுங்கூட்டியனுப்[பி](பு)வித்தார். பின்னும் அகத்தியருக்கு(த்) தாம்பிரவன்னியினுடைய வரலாறு கே[ழு](ளு)மென்று திருவுளம்பற்றினார்.

**End :**

இந்தத் தாம்ரபர்ணி மாப்பியம்(?) மிகவும் மகத்துவமாகவிருக்கும். இந்தக்கதையை நீங்கள் கேட்டீர். உங்களைப்போலே பாக்கியம்பெற்ற பேர்களில்லை. இந்தக் கதையைக் கேட்டவர்[க்கும்](கள்) பாவங்களும் தீர்ந்து முத்தியை அடைவார்கள். இந்தக் கதையை உண்மையாகக் கொள்ளாமல் இங்கிதம் பண்ணுகிறபேர்களுக்கு ஒருநா[ழு](ளு)ம் பாவமொழியாது. *

* * * அமாவாசியை, கிரகணங்கள், பிறந்தநாள் * * *

சுக்கிரவாரம் பூசத்திலே விதிபாதங்களிலே தாமிரபர்ணியிலே தீர்த்தம் ஆடிக் கோதானம், வஸ்திர தானம், கன்னிய (கா) தானம், தாம்பூல தானம் தெட்சணை முதலாகத் தானங்களெல்லாம் பண்ணின பே [ருக்கு] (ர்கள்) தேவலோகத்தைச் சேருவார்கள். * * * *.

மலடிகள் கேட்டால் புத்திரனைப் பெறுவார்கள். கன்னியைகள் கேட்டால் நல்ல ப [ற்ரு] (ர்த்தா) வைச் சேர்வார்கள்.

**Colophon :**

தாமிர பர்ணி மாதாவின் கதை முகிந்தது. அகத்தியர் திருவடிகளே சரணம். க [குரு](ர)ஞூ சித்திரைமீ உம்சூவ வியாழக்கி[ள](ழ) மை சேரன் மகாதேவியில் [ச்] சடகோப பிள்ளை வீட்டுக்கு போயிருக்கிற அவ்விடத்தி (ல்) எழுதினது தாமிரபர்ணி ம[கி ள்] (க)த்துவம்.

(௫-ч.)—

இந்நூல் தாமிரபர்ணியென்னும் மகா நதியின் மகிமையை விரிவாகக் கூறுவது. அகத்திய முனிவர் தென்திசைக்கு வரும்பொழுது அவருக்கு மகளென்னு முறையில் பரமசிவனால் அனுப்பப்பட்ட தாமிரபரணியென்பாள் நதியாகப் பரந்து கடல்வரை சென்றனளென்றும், பலதீர்த்தங்கள் இந்நதியிலுள்ளனவென்றும் கூறுவது. இந்தப்பிரதியில் முற்றுமிருக்கிறது. இயற்றியவரின்னாரெனத் தெரியவில்லை.

---

## R. No. 462.

Palm-leaf. 14⅝ × 1¼ inches. Foll. 34. Lines, 5 in a page. Tamil. Injured.

Presented in 1920-21 by Sundarammā of Alvartirunagari, Tinnevelly district.

### (*a*) குணமங்கை யரிய நயினான் வருக்கக்கோவை. GUṆAMAṄGAIYARIYANAYINĀN VARUKKAKKŌVAI.

Foll. 1*a*—25*b*.

A lovepoem relating to and incidentally eulogizing the king Ariya Nayinān of the Guṇamaṅgai country.

Complete in 100 stanzas, each stanza beginning with each of the successive letters of the alphabet respectively.

**Beginning:**

வருக்கக்கோவை.

காப்பு.

பூத்தபங்கேருக மின்சேர்குண மங்கைபுவி . . . . .
. . . . . . வருக்கக்கவித் துறைச்சொற்
பாத்தமிழ்கூற மயில்வாகனத் தெம்பரமனுக்கு
. . . . . . காடக்கடாசல முன்னிற்குமே. (க)

(காட்சி)

அருள்கூரு நீதிக் குணமங்கை வ . . . . . . . . ப்
பொருள்கூரரிய நயினான்மகீபன் பொருப்பிடத்தே
தெருள்கூரு மைங்கணை . . . . னைத்திறை கொளநீ
டிருள்கூருங்காவி லொருவல்லிபூத்திங் கெதிர்நின்றதே. (உ)

தலைவிதெய்வத்தை நினைந்து வருந்தல்.

ஒன்றாருயிரொன் றிருந்தேமிருவரு முள்ளளவு
மின்றார்பிரித்தனரோ தெய்வமேயுல கேத்துகுணங்
குன்றாவரிய நயினான்மகிபன் குணமங்கைமெ
னன்றாயிருந்ததுகாண் வினையேன்செய்த நற்றவமே. (௰க)

**End :**

(மணந்தவரணிதனைக்கண்டோர் மகிழ்தல்.)

. . . த பேர்க்குதிதிநல்க மூவேழுவள்ளல்களு
மொவ்வாவரிய நயினுன்குண மங்கையோங் . . . .
வெவ்வாறுமங்கையுடன் மணிக்கோவங்கொண்டெய்தி வந்தீர்
அவ்வாறுகண்டகண் . . . . . . ரு மென்னுருயிரே. (கக)

வாழிதெய்வங்கள்பெருமான் குணமங்கை வாழ்வுசெல்வம்
. . . . . . கு நயினுன்கிளே தம்பிமார் முதலோர்
வாழியரிய நயினுனருண்மைந்தர் மைத்துனர்சீர்
. . . . . . . . நாடோறும் வாழியவே. (ள)

**Colophon :**

வருக்கக்கோவைமுற்றும்.
அம்மன் திருவடிகளே சரணம்.

குணமங்கை விற்பூட்டிக் கொண்டு . . . . . . . . . . .
குணமங்கை மேற்குவளே கோத்தான்—குணமங்கை
நாட்டி லரிய நயினு னணைந்துயிரை
நாட்டிலிவ னுண்டே நமக்கு.

(கு-பு.)—

இது குணமங்கையரிய நயினுன் என்னும் பிரபுவைப் பாட்டுடைத்தலைவ னுக வைத்துப்பாடப்பட்ட கோவையென்னு மொருவகை நூல். அகர முதலாகவுள்ள வெழுத்துக்களைச் செய்யுளின் முதலிலமைத்துப் பாடப்பட்ட நூறு கட்டளைக் கலித்துறைகளாலாகியது. நடைநன்றுகவிருக்கிறது. நூலாசிரியரின்னுரெனத் தெரியவில்லை. ஏடுகள் முறிந்துள்ளன.

## (b) ஆழ்வாரகவல்.
## ĀḺVĀRAKAVAL.

Foll. 26.

A eulogistic stanza addressed to Nammāḷvār also known as saint Śaṭhakōpa.

**Beginning :**

ஆழ்வார்பேரிலகவல்.

அன்ன வாகன சின்மய மானவ
கஞ்ச மெல்லிதழ்க் கிஞ்சுக மனேயாய்
தாற்று மென் கமுகு கீற்றுவெண் துறைதோய்
திருவளர் பொழில்சூழ் கருணையங் குருகூர்
இந்திர னேத்துஞ் சந்திர வதன

* * * *

**End :**

மன்னிய கருணை தின்னேயே புகழ்ந்து
பத்தியி னீன்ற வித்தகர் செல்வம்
பீடுறு மனத்தில் வாடுத லில்லா

மீளா வின்ப நாளா யளித்துத்
தீண்டரு முத்தி காண்டக வெனககுன்
னீர்மலர்ச் சேவடி சார்தர வருளே.

(கு-பு)—

இந்த ஆகவல் நம்மாழ்வார் விஷயமாக ஒருபக்தர் பாடியது. நடைநன்றாக வுள்ளது. இயற்றியவர் பெயர் முதலியன வொன்றும் புலப்படவில்லை.

## (c) ஆழ்வார்துதி.
## ĀLVĀRTUDI.

Foll. 27.

Similar to the above. The stanza under notice contains 45 lines and is considered to have been taken from the ancient work called Tirukurukaimānmiyam.

Incomplete.

**Beginning :**

சுவாமி ஆ[ள்](ழ்)வார்பேரில் நேரிசை யாசிரியப்பா கவி.

திரைகொழித் துயிர்ப்பன திகழ்வலம்புரியே
வலம்புரியுயிர்ப்பன வாணித்திலமே
நித்திலமுயிர்ப்பன நெடுவெண்ணிலவே
நிலவுறவடர்பிணி நெகிழ்வனகுமுதம்
குமுதமங்குயிர்ப்பன குளிர்தண்ணறையே

**End :**

கூடியவுணர்வொடுங் குழைந்தெழுனுவாற்
பாடிநின்றாடியும் பன்னுள்கழிந்ததுன்
பொருவில் பேரின்பமும் புணர்வான்
ஒருவரந்திருவுள முவந்தருள்கெனவே.

**Colophon :**

[யி](இ)து நாற்பத்தைந்தடியவாய் இடையிடை தனிச்சொல் பெற்றுவந்த நேரிசை யாசிரியப்பா. [யி](இ)து குருகாமான்மியத்திலெடுத் தெழுதிய உதாரணப் பாட்டு.

(கு-பு.)—

இது நம்மாழ்வார் விஷயமாகவுள்ளதுதி. நேரிசை யாசிரியப்பாவாலாகியது. திருக்குருகை மான்மியமென்னும் நூலின்கண் இவ்வாசிரியப்பா வுள்ளதாக இதனிறுதி வாக்கியத்தாற் புலப்படுகின்றது. நடைநன்றாக வுளது.

## (d) தனிப்பாடல்.
## TANIPPĀḌAL.

Foll. 28.

Seven stray stanzas in praise of Vaikuṇṭhanāthar, Śaṭhakōpar, etc.

**Beginning :**

படியுண்டுமிழ்ந்தவன் வைகுந்தைநாதன் ப[ழ](ள) ப[ழ](ள)த்த
முடியுங்கருணை விழியுஞ்செவ்வாயு முகாம்புயமுந்
தடியுந்திகிரியுஞ் சங்கமும்வாளுந் தனுவுஞ்செம்பொ
னடியுந்துணைவரு மேதமியேன் செல்லுமவ்வழிக்கே.

**End :**

சோமன்வாசல் வித்துவான் பாடின கவிதை.

கற்றனவொக்கும் புதியனகேட்பன கண்ட[ன]பல்யாண்
டுற்றனவொக்கு மொருபகற்காண்பன வொன்னலரைச்
செற்றனவொக்குஞ் சிறுவிரல்சேர்ப்பன சென்றுசென்று
பெற்றனபெற்றியெண்ணுன் மறப்பானென்ன பேதைமையே.

(கு-பு.)—

இதில், வைகுந்தநாதன் திருக்குருகூராதிநாதன் இவர்கள் தோத்திர ரூபமான கட்டளைக் கலித்துறை ஒவ்வொன்றும், சிற்றின்ப விஷயமான பாட லிரண்டும், இராவண சங்கார விஷயமான பாடலொன்றும், நம்மாழ்வார் விஷயமான பாடலொன்றும், சோமனென்னும் பிரபு விஷயமான பாட லொன்றும் ஆக எழுபாடல்களுள்ளன.

## (e) இலக்கணதீபம்.
## ILAKKAṆADĪPAM.

Foll. 29*a*—32 *b*.

A short grammatical treatise in Tamil furnishing also information about the time of the three Saṅgams, the poets belonging to each Saṅgam, etc.

Complete in 15 stanzas.

**Beginning :**

ஹரி ஓம் நன்றுக.
இலக்கணதீபம்.

எழுத்தென்ன வொலியொரு தொகைத்தாய்
எழுத்துமுதல் சார்பிரு வகைத்தாய்
இருந்திரு வகைப்பெயரி லீரிருவகைத்தாய்முறை
யினத்தி லெண்ணிரு வகைத்தாய்
ஒழுக்கும் பிறப்பிடத் திரிருவகைத்தா
யுழப்பி லேழிரு வகைத்தாய்
உள்ளவடிவம் புள்ளிபுள்ளி யில்லாதென்னு
முருபிலோரிரு வகைத்தாய்
வழுக்கின்றி மாத்திரை யினைவகைத்தாய் மூன்று
வழியின்மொழி மூவகைத்தாய்
வந்துயிரு டற்போலி யிருவகைத்தாய்மூ
வகைச் சாரியைத்தாய் நடந்

தழுக்கின்றி விரியொன்றி ஞூமதர்மெழுத்
    ததிகார லட்சண மெலாம்
அறிந்துசொல்வ திலக்கணக் கவிதையல்லாத
    தவலக்கணக் கவிதையே. (க)

**End:**

ஓசைதருதிருவரிலை வாயிறைவ ஞர்பொருட்
    குப்பூரி கிழவர் தன்பால்
ஊமையாய்வருமுருக னவனுருத்திர சரும
    னுணர்ந்திடு நக்கீரர் தேவர்
கோசவுரை கொண்டுகீரங் கொற்றதே னுழார்
    கோதிலிள நாகர் படியங்
கொற்றசெயி னூராசிரியர் பெருநாகனூர்
    குவாமனைவி யாசிரியரா
மாசில்புளி யங்கர்பேருஞ் சேந்தர்செல்லூரி
    வளரா சிரியனூர ரன்
முண்டம்பெருஞ் சேந்தனூர் முகரியாசிரிய
    னூர் நீலகண்ட ராசை
மாசறமதித்த திருக்குன்றத்தி லாசிரியர்
    மற்று மொருவர்க் கொருவராம்
வழியினையுரைப்ப வந்தப்படியி லிப்படியில்
    மன்னி வாரா நின்றதே. (மரு)

**Colophon:**

இலக்கணதீப முற்றும்.

கூளகம்சூ௵ பங்குனிமீ உகூஉ புதன் கிழமையும் பூச நட்சத்திரமும் ஏகாதசியும் பெற்ற சுப யோக சுப கரணத்தில் ஆழ்வாரப்பன் இலக்கண தீபம் படித்து முகிந்த தென்றறிக.

வண் சடகோபன் திருவடிகளே சரணம்.

கருடாய நமஃ.

(கு-பு.)—
இந்நூல் தமிழிலக்கணங்களைந்தையும் தொகுத்துக் கூறுவதுடன் முச்சங்கங்களின் காலம், இடம், புலவர் முதலிய வரலாறுகளையும் விளக்குவது. பதினைந்து ஆசிரிய விருத்தங்களாலாகியது. இயற்றியவரின்னாரெனத் தெரியவில்லை. இந்தப் பிரதியில் இது முற்றுமிருக்கிறது.

## (*f*) திருக்குருகூர்வல்லிதோத்திரம்.
## TIRUKKURUKŪRVALLITŌTTIRAM.

Foll. 33*a*—34*b*.

Eulogistic stanzas addressed to goddess Lakṣmī, worshipped at Tirukkurukūr also called Alvartirunagari, in the Tinnevelly district.

Breaks off in the course of the twelth stanza.

**Beginning:**

திருக்குருகூர் வல்லியம்மன்பேரிற் கலி.

மாது திருக்குருகூர் வல்லியம்மன் பாதத்தி
லோது மொருபாவெ . . . . . . . . . . . .
கோகனகத் தாளிணையில் கூற்றுக்குக் கூற்றுயன்
கோகனகத் தாளிணைகாக் கும்.
. . . . வெங்கேசனைக்கொன்ற ரன்வா
குவலயத் தந்தணற் கெட்டாது வாட்கதை கோத்
. . . . . . . தாழிபு னைத்தாயிரம் பெயர்கொண் டென்னையாள்
குவல(ய)த்தைத் தருவைத் . . . . . . . வல்லியே. (௨)

**End:**

தொடியிருப்பான கரத்தன்னைமாரிடந் தோன்றுவது
மடியிருப் . . . . . . . . . . . . கையில் முந்துவதும்
படியிருப்பானது நீக்கியந்தாமப் பதத்திலென்றுங்
குடியிருப் . . . . . . . . திருக்குருகூர் வல்லியே. (௰௧)
பொற்பார்திருக்குருகூர் வல்லியம்மன் புனைந் . . .
. . . . . . . . . . . . . . . . . . .

(கு-பு.)—

இது, திருக்குருகூரென்னுமாழ்வார் திருநகரியில் கோயில்கொண்ட இலக்குமியின் தோத்திரம். கட்டளைக் கலித்துறையாலாகியது. இத்தனை பாடல்களாலாயதென்றும் இயற்றியவரின்னாரென்றும், தெரியவில்லை. ஏடு களிரண்டும் நுனிமுறிந்துள்ளன.

---

## R No. 463.

Palm-leaf. 11¼ × 1¼ inches. Foll. 42. Lines, 8, 9 on a page. Tamil. Fair.

Presented in 1920–21 by Sundarammā of Alvartirunagari, Tinnevelly district.

### (*a*) தெய்வச்சிலையான் திருப்புகழ். DEYVACCILAIYĀN TIRUPPUKAL.

Fol. 2*b*.

A eulogy addressed to Deyvaccilaiyān, who is no other than god Rāma worshipped at Tiruppullāṇi (Darbhaśayanam), in the Ramnad district.

Contains one stanza only.

**Beginning:**

கதிர்த்த குடைக்கீழ் முற்படு தண்டிகை
யெடுத்ததலைப்பார்க்கரியின்
சிறுத்த கழுத்திலிருப்பர்

**End:**

விதிக்குமுதற் போதித்துமன்றியு
மயக்கறநட்பாய் முற்றுமுணர்ந்தும
துணராய்போல்

மறைப்பொருள்விக்கு ? ஞானத்தடையென்பது
படித்திடுசொற்கீதத்தோ டடங்கலும்
வசிட்டனிடத்தே கற்றுவிளங்கிய பெருமானே.

(கு-பு.)—

இது திருப்புல்லணை (திருப்புல்லாணி) யென்னும் தர்ப்பசயன க்ஷேத்திரத்திலமர்ந்துள்ள திருமாலின் தோத்திர ரூபமானது. இராமாயணக் கதையைக் கொண்டு துதிப்பது. 2-வது ஏட்டில் சில பாடல்களின் முதற் குறிப்பு முதலியன எழுதப்பட்டுள்ளன.

## (b) தெய்வச்சிலையான் துதி.
## DEYVACCILAIYAN TUDI.

Foll. 3*a*—25*b*.
Similar to the work described under subdivision (*a*) of this number.
Complete in 76 stanzas.

**Beginning:**

காப்பு:

பாம்பணைமீதிற் பள்ளிகொள்பவனைப் பாரச்சிலையேந்திப்
பாதகி தாடகையைக் கொன்றிளையோன் பாங்கின் மகங்காத்து,
மேம்படுமகலிகை சாபமொழித்து வில்லை முறித்தமுதை
வேட்டுப் பொன்மான் வாலி யிராவண வேட்டையுமாடியமால்,
வாம்பரி கயரத தயரதராமனை வாழ்த்தும்படி மதுர
வாக்குத் தந்தருள்வண் சடகோபர் திருவாய்மொழியமுதம்
தேம்பயில் வீதியில் மணிமேடைகள்சூழ் திருப்புல்லாணியில்வாழ்
செகநாதா தெய்வச்சிலைமாயா தெய்வசிகாமணியே. (க)

* * * *

சூரமிலாதவர் வீரமியம்புவர் சோருங்குலமில்லார்
துங்கக்குலவானென்றுரை பேசுவர் சொல்லுந் தரமலவே,
யார்கலியுகதன்ம மீததனு லவர்களில் வேறவ நா
னய்யா வையக மதன்மேல்சொலு மவையடக்க முரையேனே,
வாரமுறும் மிமையோர் கரையேற வாசவனுணை செவ
வளருங் கயிலைக்கிரியசையா தமைவரத னினிதுறையத்,
திரவி[பூ](பி)டணன் மணிமுடிசூடச் சிலையேந்திய ராமா
செகநாதா தெய்வச்சிலைமாயா தெய்வசிகாமணியே. (௫)

காப்பு முற்றும். திருஞான முத்திரை துணை.

உலகம் பரவப் பாற்கடல் நடுவில் யோகுறுதுயில் செயுநா
ளுமைபாகனு மலரயனுந்தேவரு மொளிர் வச்சிரதரனும்,
கலகக் கடினவரக்கர் நெருக்கிய திற்கண்டக மதனல்
கர்சினி முழுவது முறைகள் திறம்பின கதிர்மதி வெளிவாரா,
இலகு பொனுலகமும் ராவணனுக்கினை யிமையோர்க்கிறையவனும்
எதிர்பொருமிடமிலை நீமுழுதும் பரமென்னத் துயில்நீங்கித்
திலகப்பிறை நுதல்விநதை குமாரன் திருப்புயமீதுவருஞ்
செகநாதா தெய்வச்சிலைமாயா தெய்வசிகாமணியே. (க)

அரனும் வாயுவு மனுமாராக வயனுஞ் சாம்பவராய்
அமரர்க்கிறையுங் கதிரவனும் பொருவாலி சுக்ரீவரென வக்கினி [நீலனுமாய்,
உரனுடைவானவர் வானரமும்பொரு கரடியுமெனவருக
வொளிர்சங்குஞ் சக்கரமு மனந்தனுமுடனுறை தம்பியராய்,
வரமிகு மானிடவடிவாய்த் [செ]தசரத மகாராசன் மகவாய்
வளமையயோத்தித் திருநகர் நாமும்வந்தடல் ராவணனைச்
சிரமொடறுத்துத் தேவரிடுக்கண் தீர்ப்போ மென்றுரைசெய்
செகநாதா தெய் வச்சிலைமாயா தெய்வசிகாமணியே. (உ)

**End :**

வாயுகுமாரன் மாருதிபகவான்மலரடி கையிலேந்த
வாலிகுமாரனுடைவாள்பற்ற வரதன் பரதனுமே,
மீயுயர் மதிவெண்குடையு திழற்ற வீரனிலக்குவனு
மெய்ப்புறு தம்பியுமொப்பறு கவரிகள்வீச விண்ணோர் பரவத்,
தூயமறைப்பொருள் மாதவரோதச் சூரியவம்சமுதற்
சூட்டியசுடர்விடு திருமுடிமுறையே சுருதிசொலுங்கிரமம்,
சேயுயர்கீர்த்தி வசிட்டன்வனைந்தான் திருப்புல்லாணியில்வாழ்
செகநாதா தெய்வச்சிலைமாயா தெய்வசிகாமணியே. (எ௰க

* * * *

புல்லுமாரிஷி சக்கரப்புனல்மூழ்கி(ப்) புகழ்திருவாசின்கீழ்ப்
புண்ணியதவஞ்செயவே வைகுந்தைப்புயல் பிரசன்னராகி
வில்லியிராமன் கடல்மேற்சீறும் வேலைதெய்வச்சிலையை
விருப்பொடுநல்கி விண்மடவாரெழுவர் விளைசாபம்போக்கி,
அல்லிமென்மலரா லயோத்தியிலந்தண ராயிரமர்ச்சிப்ப
வன்புறுசுந்தரத் தோழன் பரவ வனுக்கிரகவாழ்வருளஞ்
செல்விபற்மாசனி கல்விக்கரசி சீர்தருபுல்லாணிச்
செகநாதா தெய்வச்சிலைமாயா தெய்வசிகாமணியே. (எ௰உ)

(கு-பு.)—

இது, திருப்புல்லணை யென்னும் விஷ்ணுதலத்திலமர்ந்துள்ள திருமாலின் தோத்திர ரூபமானது. திருமால் இராமாவதாரமெடுத்து இராவணனைய ழிக்க, விலங்கைக்குச்செல்லக் கடல் வழிவிடாதிருக்கத் தர்ப்பசயனத்திருந்து பிராயோபவேசஞ்செய்து கடலை வசப்படுத்தியபடியால் இவ்விராமாயணக் கதையை அத்தலப்பெருமாள்மீது வைத்துப் பாடப்பட்டுள்ளது இந்நூல். இது காப்புச் செய்யுளுடன் எழுபத்தாறு விருத்தங்களை யுடையது. நூலாசிரியர் பெயர் முதலிய வரலாறு ஒன்றும் புலப்படவில்லை.

## (c) தெய்வச்சிலைப்பெருமாள் வாகனமாலை.
## DEYVACCILAIPPERUMĀḶ VĀHANAMĀLAI.

Foll. 26*a*—29*b*.

A eulogy describing the ten days' festival of god Deyvaccilaiyān (Rāma) on different vāhanas or vehicles, such as Garuḍa, lion, Hanumān, etc.

Complete in ten stanzas.

**Beginning:**

தெய்வச்சிலைப் பெருமாள்பேரில் வாகனமாலை.

அம்புயப் பூந்தடஞ்சூழ் குருகைவாழுநம்
மாழ்வார் மறைப்பிரபந்தம்
அரும்பாகவதர்முன் னுகவனு சந்திப்ப
வந்தணர் பின் வேதமோத
உம்பர்பொன் மலர்மாரி சொரியவுலகம்பரவ
வுலவுகருடக் கொடிமுதல்
உக்கிரவனுமக்கொடிகள் விருதுடால்சுற்றவே
யுபயசாமரம் வீசவே
தம்பட்டடம்மானம் நாகசுரம்பூரிகை
தவில்துந்துபி முழங்கத்
தத்தைமென்மொழிசிறிய முத்தநகையார்கோடி
சதிமுறை நடித்துவரவே
செம்பொனவரத்தின சிங்காதனப்பவனி
திருப்புல்லாணி மணிவீதியில்
தேவேந்திரன்முதலான தேவரடி பரவவரு
தெய்வச்சிலைக் கடவுளே. (க)

மறமழுதரித்தவராவர் பிரமரிருபாலும்
வணங்கியே நிற்பதொருபால்
வச்சிரதரனுஞ்சுரரும் வருணனுந் தொழுதுபதம்
வணங்கியேவருவ தொருபால்
பொறிவழிமனஞ் செலாமுனிவரர் பராவியே
போற்றியே வருவதொருபால்
பூலோகபுவலோக சுவலோகமுதலான
புவனந்துதிப்ப தொருபால்
நெறிநின்றவழிநின்று பொருளென்றுதநியோர்கள்
நேசித்துவருவ தொருபால்
நித்தியசூரியர்வந்து வைகுண்டவாசனென
நிருமித்துவருவ தொருபால்
திறிகரடமதயானையான சமயங்களைத்
தின்று தின்றுமிழும் வேகச்
சிங்கவாகனமீது புல்லாணிமீதுவரு
தெய்வச்சிலை கடவுளே.

**End:**

ஆதிசெகநாதர் தெய்வச்சிலைப் பெருமா
ளன்னமாய் நூல்பயின்றூர்
ஆதியுமாகியருள் பஞ்சபேரவடிவு
திருவவதாரங்கள் செய்து
சேதுமூலத்திலுயர் திருவரசு
நீழலிற்றர்ப்பாசனத்திருந்துஞ்
செய்தவஞ் செய்தும் வருணன் வாராதலீற்
திருவுளம்வெகுண்டு சீறு

நீ இராகவன் கையில் நெடிய தெய்வச் சிலையை
  நேசமுடனே கொடுப்ப
நெடு நீரிலக்கினி பாணப்பிரயோகமு
  நேமிப்ப வருணனந் நீர்
மோது சகரர் தீர்த்த வாவிவழியாய் வந்து
  முதல்வ நின்னடைக்கலமென [வரவறிகிலேன்]
முகமலர்ந்தருள் புரியுமும் மூர்த்தியாகியதில்
  முதன் மூர்த்தியான முதலே.

(கு-பு.) —

இது, திருப்புல்லணைத் தலத்து அமர்ந்துள்ள திருமாலின் பத்து நாளுற்ச வங்களில் சிங்கம், அனுமான், கருடன், யானை, அனந்தன் முதலிய வாகனங் களில் திருக்கோலங்கொண்டு வீதிவலம் வருவதை வருணித்துக் கூறுவது. பத்துப் பாடல்களாலாகியது.

---

## (*d*) திருவரங்கர் தோத்திரம்.
## TIRUVARAṄGARTŌTTIRAM.

Foll. 30.

Stanzas in praise of the Vaiṣṇa va shrine in Srirangam and of Lord Raṅganātha worshipped there.

Complete in 13 stanzas but wants the stanzas 1–4, 7 and 13.

**Beginning:**

சீரங்க நாயகரைச் சீரங்க நாயகியைச்
சீரங்க மான திருநகரைச்—சீரங்க
நீணுக மென்முடிமே னின்றசைந்தா டும்பதமுங்
காணுத கண்ணென்ன கண். (ரு)

ஓதியநம் பிள்ளைதிரு வோலக்க மண்டபமு
மாதியரங் கேச ரடியிணையுங்—கோதறுசீர்ச்
சோணுடு தென்னரங்கஞ் சூழ்செம்பெ(ா) னேழ்மதிளுங்
காணுத கண்ணென்ன கண். (சு)

* * * *

அடிவரவு :—கஸ்தூரி, ரங்கவி, தென்னர், புன்னைநிழல், சீரங்கநா, ஓதிய நம்பி, பெம்மான், அகண்டகாவிரி, எம்பெருமான், தாமோதரன், தேனூர் துளப, ஒரு வடக்கு, திருக்காவிரி.

**End:**

ஒருவடக்கு வாசலுய ருக்ரநர சிங்க
னருளுறையூர் நாய்ச்சியா ரம்மன்—இருபதமும்
வீணுர வாரமற மேலும்வை குந்தமுறக்
காணுத கண்ணென்ன கண். (௰௨)

(கு-பு.)—

இது திருவரங்கரையும், திருவரங்க நகரையும் சிறப்பித்துக்கூறும் பதின்மூன்று பாடல்களாலாயது. திருவரங்கப் பெருமானையும், அவ்வாலயத்தின் கோபுர முதலியவற்றையும் காணாத கண் பயனற்றது என்னு முகத்தால் அப்பெருமானையும் அத்தலத்தையும் புகழ்வது. இந்தப் பிரதியில் முதல் நான்கு வெண்பாக்களும் ஏழாவது வெண்பாவும் 13-வது வெண்பாவுமில்லை

---

## (e) தெய்வச்சிலையான் வண்ணவிருத்தம்.
## DEYVACCILAIYĀN VAṆṆAVIRUTTAM.

Foll. 31. Fol. 32*a* contains a love stanza in three lines.
Similar to the work described under subdivision (*a*) of this No.
Complete.

**Beginning:**

வண்ணவிருத்தம்.

உரைக்குள் ளாமெய்க் கலவிக் கமையுங்
கருத்தில வேனைத் தொல்லைத் துயர்தின்
றுலைத்திவ் வாறிச் செய்கைக் கலிவந் தலையாதே.

**End:**

திரட்கைமேல் வைத் தெய்திக் தினமும்
படிக்குள் ளாகித் தன்னிப் பாவுந்
திருப்புல் லாணித் தெய்வச் சிலையெம் பெருமாளே.

(கு-பு.)—

இதுவும் திருப்புல்லாணிப் பெருமாள் விஷயமான துதி. இதன் பின்னர் 32-வது (a) ஏட்டில்

" ஒருங்காங்கயலே குயிலினமே
யுறவாங்கயல் வேட்குயிலினமே
உயர்ந்து திரண்ட புளினமே
யுறங்காதவனன் புளினமே
மருங்கே நெருங்கு மரக்கலமே
மனதோ வனலா மரக்கலமே
வாடைக் கோதுங் கு[யிலி](ருகி)னமே
மார்பிற் குவளைக் குருகினமே

யருங்கானலி னீள்கே தகையே, யாசைதரு மங்கே தகையே, யலருதற் சூட்டெடகினமே, யன்னையசை சூட்டெடகினமே" என்னும் செய்யுள் முற்றும் பெருமல் மூவடியாக எழுதப்பட்டுள்ளது.

---

## (f) தெய்வசிலையான் வாகனமாலை.
## DEYVACCILAIYĀN VĀHANAMĀLAI.

Foll. 33*a*—34*a*. 34*b* is left blank.
Similar to the work described under subdivision (*c*) of this No.
Complete in 8 stanzas.

**Beginning:**

வாகனமாலை.

வாழிதிருப் புல்லாணி வாழி திருவாசு
வாழி யிலங்கை வழிகண்டார்—வாழிமறை
வாழிபூ மேலிருந்த மாது செகநாதர்
வாழிதெய் வச்சிலைமா மால். (௧)

வண்டூர்புல் லாணிவரு மாயன்தெய் வச்சிலைமால்
கண்டூ ரவப்பவனி கண்டவள்வான்—அண்டர்பிரான்
அம்பரம்ப தந்தொழும்பி னம்பரந்த ணந்தனங்க
னம்பரம்பெரு ரும்புழுங்கு மால். (௨)

**End:**

புல்லாணி மாயவனே புத்தேளிர் மற்றோர்பேர்
வல்லாணி யென்செவிக்கு மாறுகாண்—சொல்லாலே
நின்னையே பாஷிப்பே னின்னையே போஷிப்பே
னின்னையே நேசிப்ப னே.

(கு-பு.)—

இது திருப்புல்லணைச் தெய்வச்சிலையான் விஷயமான துதி. வெண்பாக்கள் நான்கும், கலித்துறை நான்குமாக எட்டுச் செய்யுட்களாலாகியது. இந்தப் பிரதியில் முற்றுமிருக்கிறது.

---

## (g) நம்மாழ்வார்துதி.

## NAMMĀḺVĀRTUDI.

Foll. 35.

Stanzas in different kinds of Veṇpā metre, in praise of Nammāḷvār also known as Śaṭhakōpa.

Contains four stanzas each stanza being intended to illustrate a kind of Veṇpa.

**Beginning:**

பாடுவ தெல்லாம் பராங்குசனை நெஞ்சத்தாற்
றேடுவதெல் லாம்புளிக்கீழ்த் தேசிகனை—யோடிப்போய்க்
காண்பதெல்லா நங்கையிரு கண்மணியை நாவிரும்பிப்
பூண்பதெல்லாம் மாறனடிப் போது.

(எ-து).—வெண்சீர் வெண்டளையாய் வந்த இருகுறள் நேரிசை வெண்பா. (௧)

**End:**

குலமுங் குடியுங் குணமுங் குறியும்
புலனும் பொறியும் பொருளு—நலனும்
வகுளா பரணன் வளமார் குருகூர்
மகிழ்மா லிகையான வாம்.

(எ-து).—புளிமா வரிசையா கவந்தவெண்பா. (௪)

(கு-பு.)—

இது, வெண்பாவின் வகைகளுக்கு உதாரணங்காட்டுமிடத்துச் சடகோபர் விஷயமான துதியாக வியற்றப்பட்டுள்ளது. இந்தப் பிரதியில் நான்கு வெண்பாக்களேயுள்ளன. இது இத்தனைச் செய்யுளுடையதென்றும், இயற்றியவர் இன்னரென்றும், நூலின் பெயரின்னதென்றும் புலப்படவில்லை. இதன் பிறகு, இரண்டு ஏடுகளில் சில விடுதிப் பாடல்கள் எழுதப்பட்டுள்ளன.

---

## R. No. 464.

Palm-leaf. 11⅛ × 1½ inches. Foll. 122. Lines, 12 in a page. Tamil. Injured.

Presented in 1920-21 by M.R.Ry. R. Rāghava Ayyaṅgār Avargal, Ramnad.

### திருமந்திரம்.

### TIRUMANTIRAM.

Same work as that described under No. 1185 of the D. C. Tamil MSS. Vol. III.

Contains 2,782 stanzas only.

(கு-பு.)—

இந்நூல் டிஸ்கிரிப்டிவ் காட்லாக்கின் 1185 நம்பர் பிரதியில் வந்துள்ளதே. இந்தப் பிரதியில் 2782 பாடல்கள் உள்ளன. ஆதலின் முற்றுப்பெறவில்லை. இதற்கும் அச்சுப்பிரதிக்கும் பாடபேதம் மிகுதியாகக் காணப்படுகிறது.

---

## R. No. 465.

Palm-leaf. 17½ × 1¾ inches. Foll. 300. Lines, 9 on a page. Tamil. Injured.

Presented in 1920-21 by M.R.Ry. R. Rāghava Ayyaṅgār Avargal, Ramnad.

### கம்பராமாயணம் (யுத்தகாண்டம்).

### KAMBARĀMĀYAṆAM (YUDDHAKĀṆḌAM).

Same work as that described under R. No. 514 of the D. C. Tamil MSS., Vol. II.

Contains the Yuddhakāṇḍa portion.

(கு-பு.)—

இது டிஸ்கிரிப்டிவ் காட்லாக்கின் 514 ஆவது நம்பர் பிரதியில் வந்துள்ளதே. இந்தப் பிரதியில் யுத்தகாண்டமொன்றேயுள்ளது. ஏடுகள் சிதைந்துள்ளன.

## R. No. 466.

Palm-leaf. 15⅞ × 1¼ inches. Foll. 58. Lines, 11 on a page. Tamil Fair.

Presented in 1920-21 by Sthānīkam Anantarāmakrṣṇa Ayyangār of Tirukkottiyūr.

### (*a*) சௌம்யநாராயணப்பெருமாள் கும்மிப்பாட்டு. SAUMYANĀRĀYAṆAPPERUMĀḶ KUMMIPPĀṬṬU.

Foll. 1*a*—3*b*.

Kummi songs in praise of Saumyanārāyaṇapperumāḷ, a form of god Viṣṇu, worshipped at Tirukkōṭṭiyūr : by Haridāsar ;

Complete.

**Beginning :**

சௌம்ய நாராயணப் பெருமாள்பேரில் கும்மிப்பாட்டு.

---

பொன்மகன் சொக்க ந[ரு](ரா)யணன் கோட்டி
புரி[வி](யி)னில் வா[ள்](ழ்) வேதபாராயணர்
தன்னடிமேலே கு(ம்)மித்தமி[ளி](ழி) னின்னிசை
யாலே விளம்பவே
நன்னய மாகவே துன்[று](னு)புக[ள்](ழ்)சேனை
நாதர் மலர்ப்பதங் காப்பாமே
மனுநீதர் மலர்ப்பதங் காப்பாமே.
திருநாவீறன் மகிழ்வாய் மாறனிரு
நறைமலர்ப்பாதங் காப்பாமே
தமிழ்மறைக ளெப்போதுங் காப்பாமே.

மருவுந் திருப்பாற்[க்]கடலாடி(த்) திரு மாமகளை
நிதங் கொண்டாடி(க்)—கருணைகள் தேடித்
திருக்கோட்டிக் கண்ணனைப் பாடி(த்)
தினந்தினம்
வரிசையதாக வஷ்டாங்க விமானத்தை
வலமாய்க்கும்மி யடியுங்கோடி
நீங்கள்-நலமாய்க்கும்மி யடியுங்கோடி.

**End :**

பங்களக்கும்மி யடியுங்கோடி நல்ல
வங்கணக்கும்மி யடியுங்கோடி
இங்கிதக்கும்மி யடியுங்கோடி யீண்டி
இருந்து கும்மி யடியுங்கோடி
எழுந்திருந்து கும்மி யடியுங்கோடி.

தேவலங்கார[றை](ரை)வாழ்த்துங்கோடி கோஷ்டிச்
செங்கண் மாதவனடி போ[த்து](ற்று)ங்கடி

ஆவலுடன் புக[ள்](ழ்)தேடுங்கோடி
வெகுவன்பாயிருந்து கொண்டாடுங்கோடி
மனந்தென்புடனே வாழி பாடுங்கோடி. (உ௰சு)

**Colophon:**

சவுமியநா[ரு](ரா)யணப்பெருமாள்பேரில் கும்மிப்பாட்டு[யெ]
(எ)ழுதிமுகிந்தது ; முற்றும்.

(கு-பு.)—

இது, திருக்கோட்டியூர் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள சௌம்ய நாராயணப்பெருமாள் விஷயமான கும்மிப்பாட்டு. இயற்றியவர் அரிதாசரென்று தெரிகின்றது. இந்தப்பிரதியில் இது முற்றுமிருக்கிறது.

---

## (b) திருநாள்வாகனக்கவி.
## TIRUNĀḶVĀHANAKKAVI.

Foll. 3b—4b.

Brings out the greatness of god Saumyanārāyaṇapperumāḷ of Tirukkōṭṭiyūr by praising the different vehicles used in the festivals celebrated for Him: By Haridāsa.

Stanzas 1 to 11 complete and the 12th incomplete.

**Beginning:**

திருநாள் வாகனக்கவி, குறுவிருத்தம்.

ஸ்ரீப்புவிகளே துதிக்குந் தேவேந்திர
னானயனு முவகைகூறு
மிப்புவியிற் றென்கோட்டிச் சௌமியமால்
முதல் [த்]திருநா[ள்க்](ட்)கிலங்குதங்கச்
சப்பரத்தி லெழுந்தருளி வீதிசுற்றிவரும்
பவனிதன்னைப்போற்ற
மைப்புணரி சூழ்புவிக்[கி](கு)
மிக்கரசாயிருப்பர்வெகு வண்மேதானே. (க)

**End:**

திருவாருந் திருக்கோட்டி(ச்) சவுமியமால்
செம்பதுமத் திருத்தாள் போற்றி
அரிதாசன் சொனன திரு[ஞ](நா)ள்விருத்தங்
கற்றுணர்ந்தோ ரனேககாலம்
விரிவான தனதனைப்போல்[ச்] செல்வமது
பெற்றுயர்ந்து விளங்க வேதன்
பரிவாக மகிழ்ந்திட நன்றாயிருப்பர்
தினநாலாம் ப(த)த்திற்றானே. (௰௨)

**Colophon:**

திருநாள்வாகனக்கவி குறுவிருத்தம் எழுதிமுகிந்தது ; முற்றும்.

சந்[ை]த விருத்தம் :—

நாட்டில்[த்]திசைதிசை போய்வாய்நகைவிழி
காட்டிக்கனிவொடு நாமீதசடரை
நாட்டில்[த்]துதிசொலி வீணேயெனதுடல்—மெலிவேனு,
ஆட்டிக்கூரமவிடு நீசைலேதிகர்
பூட்டிச்சுழல்சென்ம வாறுநிதமுன
தாட்டிக்குனேயவ தேதேதிலேயிலே—யருள்வாயே,
தோட்டிக்கரியுடல் வேருயுயிரினே
யோட்டிக்கொலுமது சூதாமருமலர்
சூட்டிச்சனகியை மாலாய்மருவிய—ரெகுராமா,
கோட்டிக்கதிர்மதி தேரோடமுபட
மாட்டிப் பொருபொழில் சூழ்மாவளமிகு
கோட்டி . . . . . . . . . . .

(கு-பு.)—

இது, திருக்கோட்டியூர் சௌம்யநாராயணப்பெருமாள் திருவிழாவில் ஒவ்வொருதினத்துமுள்ள வாகனச்சிறப்பை விளக்குவது. பன்னிரண்டு விருத்தப் பாடல்களாலாகியது. இறுதியிலுள்ள வண்ணவிருத்தம் முற்றுப் பெறவில்லை. நூலாசிரியர் அரிதாஸரென்று இறுதிச்செய்யுளால் தெரிகின்றது.

---

## (c) சௌம்யநாராயணப்பெருமாள் கும்மிப்பாட்டு. SAUMYANĀRĀYAṆAPPERUMĀḶ KUMMIPPĀṬṬU.

Foll. 5a—6b.

Similar to the work described under subdivision (a) of this number Incomplete.

**Beginning :**

செந்திருவா[ள்](ழ்) திருக்கோட்டியூர் மேவிய
 [ஸ்ரீ](சி)தரன்மேல் கும்மிபாட்டுரைக்க(ச்)
சுந்தரஞ் சேர்சங்குசக்கரத்தா[ள்](ழ்)வார்தன்
 துய்ய மலர்ப்பாதங் காப்பாமே.

* * *

வட்ட[னு](று)தல் பெருந்தேவி துணை . . .
 வாருடன் சந்திரமதியுடனே
சட்டமாய்ப் பேசுமன்னமுத்தே நீங்கள்
 தா[னி](மி)கு மூ[னு](ன்று)பேர் வார்[று](ரு)ங்கோடி

**End :**

கைதனில்தெண்டு தானுங்கொண்டுஅவர்
 கழுத்தில் துளசிமாலை பூண்டு
இடையில் கா[சா](ஷா)யந் தரித்துக்கொண்டவர்
 இதோவிருக்கிறுர் பா[று](ரு)ங்கடி

